# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச்சங்கத் திங்கள் வெளியீடு.

| துணர் உக | பார்த்திப—ஐப்பசி 1945—அக்டோபர் | மலர் எ |
|---|---|---|

## முத்தமிழ் வள்ளல் மீண்டுந் தலைவ ரானார்.

கரந்தைத் தமிழ்ச்சங்க உறுப்பினர்களின் பொதுக்கூட்டம் 30—9—'45-ஆம் நாள் மாலைப்போதில் நிகழ்வுற்றது. இக்கூட்டத்தில் **முத்தமிழ்வள்ளல், இராவுபகதூர். திரு. A. Y. அருளாநந்தசாமி நாடார்** அவர்களையே மீண்டும் சங்கத் தலைவராகவும், தளவாய்பாளையம் இளம்தாரரும், தமிழ்ப்பே ரறிஞரும், முன்னுளிலிருந்தே சங்க அமைச்சராயமைந்து தொண்டாற்றிச் சிறப்புற்றாரும் ஆகிய **திரு. நீ. கந்தசாமி பிள்ளை M. R. A. S., (London)** அவர்களையே மீண்டும் சங்க அமைச்சராகவும் உறுப்பினர்கள் ஒரு மனதுடன் தேர்ந்தெடுத்தனர். சங்கப் பொருளாளர் பதவி குறித்து, **திரு. V. ஐயா பிள்ளையவர்களும் திரு. A. சண்முக சுந்தரம் பிள்ளை B. A.,** அவர்களும் போட்டியிட்டனர். பெருநிலக்கிழவராயுள்ளவரும், சங்க வளர்ச்சியில் நாட்டங்கொண்டு இடைவிடாது உழைத்து வருபவரும், எல்லோரிடமும் அன்போடும், பணிவோடும் நடந்து கொள்கின்றவரும் மனமொழி மெய்களால் பிறர்க்கு நன்மை செய்தலையே கடமையாகக் கொண்டவரும் ஆய திரு. ஐயா பிள்ளை யவர்களை ஆதரித்துச் சங்க உறுப்பினர் எண்பத்தெட்டு பேர் உறுதிச்சீட் டளித்தனர். திரு. சண்முகசுந்தரம் பிள்ளையவர்களை ஆதரித்து, சங்க உறுப்பினர் இருபத்திரண்டு பேர் உறுதிச்சீட் டளித்தனர். பெரும் பான்மையான உறுப்பினர்களின் ஆதரவு பெற்ற திரு. ஐயா பிள்ளையவர்களே பொருளாளராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றூர்களெனச் சங்கத் தலைவரவர்கள் அறிவித்தார்கள். இவ்வறிவிப்பினைக்கேட்ட சங்க உறுப்பினர்கள் கையொலியெழுப்பி ஆர்ப்பரித்தனர். சங்க நிறைவேற்றுக்கழக உறுப்பினராக, **இராவுசாகிபு. ஐ. குமாரசாமி பிள்ளை B.A.,** அவர்களும், **திரு. அ. கணபதிபிள்ளை B.A.,** அவர்களும், பெருநிலக்கிழவர். **K. நல்லமுத்து நாட்டாரவர்களும், திரு. T. P. வேதாசலம் பிள்ளை B. A.,** அவர்களும் சங்க உறுப்பினர்களால் ஒரு மனதுடன் தேர்ந்தெடுக்கப் பட்டனர். கணக்காய்வாளராக **G. சுப்பராயப்பிள்ளை** அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பிறர்க்கென வாழும் பெருமகனாரும் இரப்பவர்க்கில்லையெனாது அளித்துவக்கும் கொடை வள்ளலும் கரந்தைப் புலவர் கல்லூரிக்கெனக் கட்டிடம் எழுப்பித் தந்து, கல்லூரியைப் புரக்க ஒருப்பட்டுள்ளாரும் ஆய முத்தமிழ் வள்ளல், இராவுபகதூர். A. Y. அருளாநந்தசாமி நாடார் அவர்கள் மீண்டுஞ் சங்கத்தலைவரானமை சங்க வளர்ச்சிக்கு ஒரு பெரும் நற்குறியென எண்ணி மிக்க மகிழ்ச்சியடைகின்றோம்.

# வரலாற்றுப் பகுதி.

யாம் சென்ற திங்கள் தமிழ்ப் பொழிலில் "உலகப் பெரும் போர் ஒழிந்தது மகிழ்வே" என்ற தலைப்பில் எழுதியிருந்த வரலாற்று நிகழ்ச்சிகளைப் படித்துணர்ந்த மாணவர்களும், பொழிலன்பர்களும் மேலுந் தொடர்ந்து இவ்வரலாற்று நிகழ்ச்சிகளை வரையத் தூணடி வேண்டிக்கொண் டுள்ளனர். அவர்கள் வேண்டுகோட் கிணங்கி இவ்வரலாற்று நிகச்சிகளைத் தொடர்ந்து விளக்கிச் செல்வாம்.

யாம் சென்ற திங்கள் தமிழ்ப்பொழிலில் உருசியா, "டாஞ்சியர்" ஆட்சிப் பொறுப்பில் பங்கு கேட்பதோடு நில்லாது, சூயஸ் கால்வாயிலும், பனுமா கால்வாயிலும்கூட, இனிப் பங்கு கேட்கும்போலுமென ஐயப்பாட்டுடன் குறிப்பிட்டிருந்தோம். அவ்வுரை பொய்க்காமல் இருத்தற்குரிய அறிகுறியாக இதுபோது இலந்தன்மாநகரில் கூடிப் பேசிவரும் வல்லரசயல்நாட் டமைச்சர்களிடை வாதம் நிகழ்ந்து வருகின்றது. அவ்வயல்நாட் டமைச்சர் அவையில் நடுத்தரைக் (மத்திய தரைக்) கடலில் இனி யார் யாருக்கு எவ்வெவ்வளவில் ஆட்சிநிலையமைந்திருக்கவேண்டும் எனும் உறழ்பாடு குறித்த செய்தி ஆராயப் பெறுகின்றது. இத்தாலியின் பழைய குடியேற்றநாடுகளில் (colonies) பெரும்பாலானவை நடுத்தரைக் கடலில் சிறப்பிற் குரிய இடங்களாக அமைந்திருக்கின்றன. இதுபோது அக்கடலில் ஆட்சியுரிமைபெற விரும்பும் வல்லரசுகளெல்லாம் அக்குடியேற்ற நாடுகளைக் கவர முற்பட்டுச் செயலாற்றுகின்றன. போர் நிகழும் காலத்திலும், போரில்லாக் காலத்திலும் நடுத்தரைக் கடல்வழி எவ்வளவு சிறந்தது என்பதனை நன்குணர்ந்தே இவ்வல்லரசுகள் அக்குடியேற்ற நாடுகளில் ஆட்சியுரிமைபெற முயற்சிக்கின்றன. இதுவரை நடுத்தரைக் கடல் வழியைப் பெரும்பாலும் தமது தனியுரிமையாகப் பிரித்தானியப் பேரரசினர் பயன் படுத்தி வந்தனர். நடுத்தரைக் கடலின் மேற்கு முனையிலுள்ள 'டாஞ்சியர்' ஆட்சிப் பொறுப்பில் உருசியா பங்கு கேட்டதை முன்னரேயே சுட்டி விளக்கியுள்ளேம். இதுபோது நடுத் தரைக் கடலைத் தாங்களும் தடையின்றிப் பயன்படுத்த இடமிருக்க வேண்டுமென உருசியர் கேட்கின்றனர்.

நடுத்தரைக் கடல் பிரித்தானியப் பேராட்சிக்கு உயிர் நாடிபோல் விளங்குவதாகும். இங்ஙனம் உயிர் நாடிபோன்ற நடுத்தரைக் கடலில் உருசியருக்கு உரிமையளித்து உருசியர் கை ஓங்க விட்டால் பின்னல் பெருஞ்சிக்கலுக்கு இடமாகும் எனப் பிரித்தானியர் கருதுகின்றனர். இத்தாலியக் குடியேற்ற நாடுகளிலுள்ள மக்களின் கருத்துக்களையோ உரிமைகளையோபற்றி ஒரு சிறிதும் கவலை கொள்ளாமல் வல்லர சயல்நாட் டமைச்சர்கள் அவர்களை உடைமைப் பொருளாக வைத்தாள எண்ணி இதுபோது இலந்தன் மாநகரில் உரையாடி வருகின்றனர். இத்தாலியக் குடியேற்ற நாடுகளிலும் நடுத்தரைக்

கடலிலும் பங்கு பெற விரும்பும் உருசியருக்கும் அவற்றைத் தங்கள் உடைமையாக்க எண்ணியுள்ள பிரித்தானியருக்கும், பிரெஞ்சுக் காரருக்கும் இடைநின்று சந்து (சமாதானம்) செய்விக்க, அமெரிக்கா முனைந்துளது. தாங்கள் எல்லோரும் குழுமி நின்று அறத்தலைவர் (தர்மகர்த்தர்) சிலரைத் தேர்ந்தெடுப்பதெனவும் அங்ஙனம் தேர்ந் தெடுக்கப்பெறும் அவ்வறத்தலைவர்களைக் கொண்ட அவையினர் அக் குடியேற்ற நாடுகளில் ஆட்சி புரியும் மாமண்டிலத்தலைவர்களைத் (Governor General) தேர்ந்து நியமிப்பரெனவும் அங்ஙனம் தேர்ந் தெடுக்கப்பெறும் மாமண்டிலத் தலைவர்கள் அக் குடியேற்ற நாடுகளை ஆட்சி புரிவரெனவும், அங்ஙனம் ஆட்சி புரியும் அம்மா மண்டிலத்தலைவர்களுக்கு ஆய்வுரை கூறுதற்குப் பல தேயப் பொறுப் பாளர் (Representatives) கொண்ட ஒரு மன்றத்தை நாட்டுவதெனவும் அம் மன்றத்தார் கூறும் ஆய்வுரைகளை யேற்று இம் மாமண்டிலத் தலைவர்கள் ஆட்சி புரிவரெனவுங் கூறி, இவ் வல்லரசாளர்கள் ஒருவருக்கொருவர் போட்டியிட்டுக் கொள்ளாமல் விலகி நிற்க அமெரிக்கா வழி செய்கின்றது. மேலும் பத்து அல்லது பதினைந்து ஆண்டுகளில் அக்குடியேற்ற நாடுகளுக்குரிமை அளித்து விடுவதாக இதுபொழுதே உறுதி கூறி விடுவதெனவும், அமெரிக்கா ஆய்வுரை கூறியுளது. இம்முடிபு என்னுகின்றதென்பதனை அறிந்தபின் இது குறித்து எழுதுகின்றேம். இனி, சென்ற கட்டுரையோடு தொடர் புற்ற செய்திகளைத் தொடர்ந்து வரைவாம்.

உலக வரலாறு தொடங்கிய நாளிலிருந்து ஐரோப்பியப் பிரித் தானியர், தோல்வியைப் பொருட்படுத்தாது போருடற்றி இறுதியில் வெற்றி காண்பர் என்பதனை அவர்கள் வரலாறு அறிவுறுத்து கின்றது. இப் போரிலும் பிரித்தானியர் வரலாறு நல்ல படிப்பினையை உலகிற் களித்துளது.

இரண்டாம் உலகப் போர் தொடங்கிய காலத்தில் பிரித்தானியப் பேரரசின் முதலமைச்சராகச் சேம்பர்லேன் அவர்கள் அமர்ந்திருந்தார். உருசியாவின் பொது உடைமைக் கொள்கைகள் ஐரோப்பா கண்ட முழுமையும் பரவி விடுமோ என்ற ஐயம் காரணமாகப் பொது உடைமையை எதிர்க்கும் கிட்லரின் கொடுஞ் செயல்களைக் கண்டும் கேட்டும் உடனடியாக அவரை ஒடுக்க எடுக்க வேண்டிய நடை முறைகளைப் பின் பற்றுது, சேம்பர்லேன் அவர்கள் காலங்கடத்தினர். உருசியாவின் பக்கம் கிட்லர் திரும்பினுல் யாம் இங்கிலாந்தில் போர்ப் படைகளையும் போர்க்கருவிகளையும் மிகுதியாகப் படைத்துக் கொள்ளலாமெனவும் அவற்றைக் கொண்டு, தற்காப்பு வலியையும் மிகுதியாக்கிக் கொள்ளலாமெனவும் இம் முதலமைச்சர் முதலில் எண்ணினர்.

இவ் வெண்ணங் காரணமாகச் சிறுசிறு நாடுகளைக் கிட்லர் அடிப்படுத்தியதையும் பொருட்படுத்தாது சேம்பர்லேன் அவர்கள் கடல் கடந்து சென்று கிட்லருடன் கலந்து பேசி ஒரு ஒப்பந்தஞ் செய்து திரும்பினர். இம் 'மியூனிச்சு' ஒப்பந்தத்தைச் செய்துகொண்ட

பின்னரேயே பலவாறாய திடுக்கிடும் நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. "வார் சேல்ஸ்" ஒப்பந்த காலத்திலிருந்தே டான்சிக்குத் துறைமுகங் குறித்து வேறு பாட்டுணர்ச்சி செருமானியர்க்கும் போலந்து நாட்டினர்க்கும் பிறர்க்கும் நிகழ்ந்து வந்துளது. இவ்வமையத்தில் "டான்சிக்" கிலுள்ள செருமானியர் பிற நாட்டினரால் சுட்டு வீழ்த்தப் படுகின்றனர் எனச் செருமானிய அமைச்சருள் ஒருவராயிருந்த "கோயபல்ஸ்" கூறினர். போலந்து நாட்டின் ஆட்சியிலிருந்த "டான்சிக்" கென்னும் துறைமுகத்தையும் "காரிடா" ரையும் தங்களி டம் ஒப்படைக்கவேண்டுமெனப் போலந்துநாட்டினரையும் பிறரையும் செருமானியர் முதலில் நயமொழிகளால் வேண்டிக் கொண்டனர். போலந்து நாட்டினர் செருமானியர் விருப்பிற் கிணங்க முடியாதென மறுத்துரைத்தனர். போலந்து நாட்டினர் செருமானியருடன் ஒரு உடன்பாட்டு ஒப்பந்தத்திற்கு வர வேண்டுமெனவும், அங்ஙனம் ஒரு உடன்பாட்டு ஒப்பந்தம் செய்து கொண்ட பின் போலந்து நாட்டி னரும், செருமானிய நாட்டினருங் கூடி நின்று உருசியா (ரஷ்யா)வைத் தாக்குவதெனவும், அங்ஙனங் கூடி நின்று தாக்குதற்குப் போலந்து நாடு உதவி செய்தால் போலந்து நாட்டின் உதவிக் கெதிருதவியாகச் சில நிலப்பகுதிகள் போலந்து நாட்டிற்குத் தரப்பெறும் எனவும் செருமானியர் 1939-ஆம் யாண்டு சனவரித் திங்களில் இறுதியாக உறுதிமொழி கூறினர். செருமானியரின் வேண்டுகோளையும், காத லுரைகளையும், உறுதிமொழிகளையும் போலந்து நாட்டினர் பொருட் படுத்தாது மறுத்துரைத்தனர். இங்ஙனம் மறுத்துரைப்பதற்கு ஆதர வளித்து ஊக்கியவர்கள் பிரித்தானியப் பேரரசாளரும் பிரெஞ்சுப் பேரரசாளரு மாவார்கள். இங்ஙனம் போலந்து நாட்டினர் எவ் வகையிலுந் தங்களுடன் ஒவ்வாமையைக் கண்ட பின்னரேயே செருமானிய அமைச்சர் "கோயபல்ஸ்" மேற்கூறியாங்குச் செரு மானியர் டான்சிக்கில் சுட்டு வீழ்த்தப்படுகின்றனர் எனக் கூறினர். இங்ஙனம் அவர் கூறிய மொழிகள் போலந்தின் மீது போர் தொடுத் தற்குக் கருவியாகப் படைத்துக் கூறிய மொழிகளே யாம்.

மேற் கூறியாங்குத் தங்களின் வேண்டுகோளையும் உறுதிமொழி களையும் நயப்புரைகளையும் போலந்து நாட்டினர் மதித்து ஏற்றுக் கொள்ளாமல் புறக்கணித்ததைக் கண்ட செருமானியர் 1939-ஆம் யாண்டு செப்டம்பர் முதல் நாள் போலந்து நாட்டின் மீது படை எடுத்தனர். தங்கள் ஆதரவினை அடிப்படையாகக் கொண்டு, செரு மானியரின் வேண்டுகோளுக்கும் நயப்புரைகளுக்கும் இணங்க மறுத்த போலந்தின் மீது செருமானியர் போர் தொடங்கியதைக் கண்ட பிரித்தானியப் பேரரசினரும், பிரெஞ்சரசினரும் தாங்கள் செரு மானியர் மீது போர் தொடங்கியுள்ளதாக, செப்டம்பர் 3-ஆம் நாள் அறிக்கை வெளியிட்டனர். போலந்து நாட்டு உரிமையை (சுதந்திரத்தை) மீட்டன்றிப் போரை நிறுத்தோம் எனவும் பறை சாற்றினர். இவர்கள் அறிக்கை வெளியிட்ட பின்னர், செப்டம்பர் 17-ஆம் நாள் போலந்து நாட்டின் மீது தாமே வலிய வந்து தாக்கிப் போருடற்றும் செருமானியருடன் போலந்து நாட்டுப் போர் வீரர்கள்

தனித்து நின்று போருடற்றினர். இங்ஙனம் செருமானிய நாட்டுப் படைவீரரும் போலந்துநாட்டுப் போர்வீரரும் போருடற்றும் பொழுது உருசியா கிழக்கிலிருந்து போலந்தைத் தாக்கியது. உருசியத் தலைவர் 'ஸ்டாலினும்' 'கிட்லரும்' 1939-ல் செய்து கொண்ட ஒப்பந்தத்தில் போலந்தைத் தாக்கிச் செருமானியரும் உருசியரும் கூறிட்டுக் கொள்வதென மறைமுகத் திட்டம் வகுத்திருந்தனர். அத் திட்டத்தின் வண்ணம் உருசியரும் போலந்தைத் தாக்கினர். இரு புறமும் இரு வலிய போர்ப்படை வீரர்களால் தாக்கப்பெற்ற போலந்து, அத்தாக்குதலைப் பொறுக்கலாற்ருது வீழ்ச்சி யுற்றது. செப்டம்பர் 27-ஆம் நாள் போலந்தின் தலைநகரமாய 'வார்சா' பிறரால் கைப்பற்றப்பட்டது. 1939-அக்டோபர் திங்கள் 31-ஆம் நாள் பொதுவுடைமை உயர்நிலைக் கழகத்தின் முன் சொற்பொழி வாற்றிய உருசிய அயல் நாட்டு அமைச்சர் மாலடோவ், "போலந்தின் வாழ்வு முடிந்து விட்டது. இனி ஒரு நாளும் உரிமை (சுதந்திர) நாடாக அது எழமுடியாது. எதிர்ப்பாற்றலும் போராற்றலும் பல நூற்றுண்டுகளாகப் போலந்து மக்களின் குருதியில் ஊறிக் கிடந்தன. இங்ஙனம் ஆற்றல்பெற்ற மக்களை வீழ்த்தி விட்டோ"மென முழங்கினுர். பல நூற்றுண்டுகளாகப் போலந்து மக்கள் உருசியர் களையும் செருமானியர்களையும் ஆஸ்திரியர்களையும் எதிர்த்துப் போரு டற்றி யுள்ளனர். இதுபோது போருடற்றலிற் ருேல்வி யுற்றனர். முற்காலத்தில் போலந்து நாட்டினருக்கு உருசியர் இழைத்த கொடுமைகளை எண்ணிக் கண்ணீருகுத்த காலஞ் சென்ற உருசியத் தலைவர் லெனின் கூறிய மொழிகள் உளங்கொளற் பாலன. "போலந்து மக்களுக்கு உருசியர் செய்துள்ள கொடுமைகளைப் போல வேறு எவரும் செய்திலர். 'சார்' (Czar) களின் அடியாட்களாய் அமர்ந்து போலந்தின் உரிமைக்கு யாம் குழிபறித் துள்ளோம். பிறரை அடக்கி யாட்சி புரிவதிலும் கொடுமை புரிவதிலும் நம்மை விடச் சிறந்தவர் உலகிற் பிறர் இலர். போலந்து பின்லந்து உக்ரேன் மக்களுக்கு நாம் தன்னுறுதி (சுயநிர்ணய) உரிமை தர மறுப்பதேன் ? நம்மை விட்டுப் பிரிதற்கு அவர்கட்கு உரிமை உண்டு" எனக் கூறி யுள்ளார். அவர் கூறிய அறவுரைகளையும் அறிவுரைகளையும் உருசியர் ஆராய்ந்து பார்த்தனரா ? போலந்தைத் தாக்கி அந் நாட்டின் பெரும் பகுதியை யன்ருே தம்மடிப் படுத்தினர் !

போலந்தைத் தாக்கி அடிப்படுத்துதலிற் செருமானியரும் உருசி யரும் ஒத்துழைத்தனராயினும் இவ்விருவரின் கூட்டுறவு நீடித்து நிற்கவில்லை. 1941-ல் கிட்லர் உருசியா மீது போர் தொடுத்தார். அவர் போர் தொடுத்ததை அறிந்த உருசியத் தலைவர் ஸ்டாலின் போலந்தோடும் பிரித்தனேடும் உடன்பாட் டொப்பந்தம் செய்து கொண்டார். இவ்வாறு உருசியா பிரித்தனேடு உடன்பாட்டு ஒப்பந் தம் செய்து கொண்ட பின், பிரித்தானிய அயல் நாட்டு அமைச்சர் ஈடன் அவர்கள் போலந்தின் நிலப் பகுதிகளின் உரிமை குறித்து உருசியா செருமானியுடன் செய்து கொண்ட ஒப்பந்தங்கள் செல்லத் தக்கவை யல்ல எனவும், 1939-ஆகஸ்டிற்குப் பின் போலந்தில்

ஏற்பட்ட மாறுதல் ஒன்றையும் பிரித்தானிய அரசு உடன் பட்டு ஏற்றுக்கொள்ளா தெனவும் தெளிவு படுத்தினர்.

காலப்போக்கிற் கேற்பப் பிரித்தானியர், தலைவர்களையும் கொள்கைகளையும் மாற்றிக்கொண்டு செயலாற்றி வென்றிகாணுதலில் மிக மிக வல்லுநர்.

1940-ஆம் யாண்டு ஏப்பிரல் எட்டாம் நாள் நார்வேயும், டென்மார்க்குந் தாக்கப்பட்டன. இத்திங்கள் பதினைந்தாம் நாள் பிரித்தானியப் போர் வீரர்கள் நார்வேயிலிறங்கினர். இறங்கிப் போருடற்றித் தோற்றனர். இத்திங்கள் முப்பதாம் நாளிலிருந்து நடுத்தரை (மத்தியதரை)க் கடலில் பிரித்தானியரின் கப்பல்கள் செல்லுதற்குரிய வாய்ப்பில்லா தொழிந்தமையால் ஆப்பிரிக்காவைச் சுற்றிக் கொண்டு செல்ல வேண்டியதாயிற்று. மே, திங்கள் பத்தாம் நாள் ஹாலந்தும், பெல்ஜியமும் செருமானியரால் தாக்கப் பெற்றன. இங்ஙனம் பிரித்தானியர் தோல்வியுற்று வருதலையும், செருமானியர் ஒவ்வொரு நாடாக வென்று அடிப்படுத்தி வருவதலையுங் கூர்ந்து நோக்கிய பிரித்தானியப் பாராளு மன்ற உறுப்பினர், போரில் வென்றி கொணருந் தலைவர் ஒருவரை அமைச்சராகத் தேர்ந்தெடுக்க விரும்பினர். அங்ஙனம் பிரித்தானியப் பேரரசின் முதலமைச்சராந் தகுதியும் அறிவாற்றலும் ஊக்கமும் பெற்றவரும், பல போர் முனைகளில் போருடற்றி வெற்றி தோல்விகளை அறிந்து பழக்கப்பட்டவருமாகிய **வின்ஸ்டன் சர்ச்சில்** அவர்களைத் தலைவராகத் தேர்ந்து கொள்ளப்பாராளும் மன்றத்திலுள்ள கட்சியினரெல்லாம் ஒருப்பட்டு ஒப்பிநின்றனர். இவ்வறிவொடுபட்ட செயலேபின் நன்மை விளைத்தது.

இவ்வமையத்தில் '**சேம்பர்லேன்**' அவர்கள் முதலமைச்சராயிருந்தார். நார்வேயில் இறங்கிய பிரித்தானியப்போர் வீரர்கள் தோல்வியடைந்தமை குறித்துப் பாராளும் மன்றத்தில் வாதம் நிகழ்ந்தது. இங்ஙனம் உறழ்வு நிகழ்ந்த காலத்தில் சேம்பர்லேன் அவர்களின் கட்சி உறுப்பினராகிய 'அமெரி' அவர்களும் எதிர்கட்சியாளர் போலச் சேம்பர்லேன் அவர்களைத் தாக்கிப் பேசினர். கால நிலைமையையும் ஐரோப்பிய மக்கள் உளநிலைமையையும், பாராளும் மன்ற உறுப்பினர்களின் நிலைமையையும், சுற்றுச்சூழல்களையும் நன்குகூர்ந்து நோக்கிய சேம்பர்லேன் அவர்கள் மக்களின் ஆதரவு முற்றிலும் தமக்கில்லை என்பதை உணர்ந்துகொண்டு பாராளும் மன்றத்திலுள்ள கட்சிகளைக்காட்டினும் தம் கட்சிக்கு 81 உறுப்பினர் மிகுதியாக ஆதரவளித்துங்கூடத் தமக்கு முதலமைச்சர்பதவி வேண்டாம் எனமறுத்து அப்பதவியினின்றும்விலகிக்கொண்டார். இஃதொன்றே சேம்பர்லேன் அவர்களின் அறிவுடைமையும் அடக்கத்தையும் பெருந்தன்மையையும் புலப்படுத்தி நின்றதென்னலாம்.

சேம்பர்லேன் அவர்கள் முதலமைச்சர் பதவியினின்றும் விலகிக் கொண்டபின், 1940-ஆம் யாண்டு மே, திங்கள் 13-ம்நாள் வின்ஸ்டன் சர்ச்சில் அவர்கள் தொழிற்கட்சியுடனியைந்து எல்லாக் கட்சிகளும் கலந்து நின்று செயலாற்றக் கூடிய முறையில் அமைச்சவையைத்

திருத்தியமைத்துத் தாம் முதலமைச்சரானார். ஒருகட்சியே அரசியலில் ஆக்கம்பெற்று அமைச்சவையை நிறுவவேண்டுமென்பார் பிரித்தானியப் பாராளுமன்றத்தில் நிகழ்ந்த இச்செயலை எண்ணி உளந்திருந்துவாராக! இங்ஙனம் கூட்டுக்கட்சி அமைச்சவை பிரித்தானியப் பாராளும் மன்றத்தில் நிறுவப்பெற்ற பின் சர்ச்சில் அவர்கள் முதலமைச்சராயிருந்து சிறப்புறப் பணியாற்றினார். இவருடைய சொல்லாற்றலும் செயலாற்றலும் பிரித்தானியர்க்கும் உலக மக்களுக்கும் பெருங்கிளர்ச்சியையும், எழுச்சியையும் ஊக்கத்தையும் விளைத்தன எனலாம். 1940-ஆம் யாண்டு சூன் இருபத்தாறும் நாள் இங்கிலாந்திற்கென ஆற்றிய சொற்பொழிவில் கிட்லர் கீழ் வருமாறு குறிப்பிட்டார். "கூடிய விரைவில் செருமானியரின் வெடிகுண்டுகள் தேம்ஸ் நதிக்கரையில் தோற்றமளிக்கப் போகின்றன. போதிய பயிற்சி பெறாத நாற்பது நூறாயிரம் பிரித்தானியப் போர் வீரர்கள் இவற்றைத் தடுக்க எடுக்கும் முயற்சியில் வெற்றி காணமாட்டார்கள்." இங்ஙனம் கூறிய கிட்லர் இதனோடமையாது, மேலும் 10—7—'40-ல் கூறிய மொழிகள் நகைப்பிற் கிடமானவையாம். "போரின் முடிவு நிலை மிக மிகக் குறுகியதாக விருக்கு மாதலால் சர்ச்சிலும், ஈடனும் ஏனைய ஒத்துழைப்பாளர்களும் கானடாவிற்குச் சென்று தங்குதற்காகக் கப்பலில் இடமொதுக்கச் சொல்லுகிறேன்." என மொழிந்தார். 4—9—'40-ல் கிட்லர் கூறியனவும், அவ்வுரைகட்கு மறு மொழியாகச் சர்ச்சில் அவர்கள் கூறியனவும் ஆயசொற்கள் யாம் என்றும் எண்ணி இன்புறத் தக்கன.

"**இங்கிலாந்திலுள்ள மக்கள் வியப்புற்று ஏன் இன்னும் 'கிட்லர்' வரவில்லை? எனக் கேட்பார்களானால், கவலை வேண்டாம்! கிட்லர் வருகிறான்.**" என, கிட்லர் செருமானியிலிருந்து சுவைப்பொருள் தோன்றச் சொற்பொழிவாற்றினார். இச்சொற்களைச் செவிமடுத்த சர்ச்சில் அவர்கள் ஹிட்லர் மொழிகளுக்கு மறுமொழி கூறுங்கால் மிக மிகச் சுருக்கமாகவும் பொருள் செறிந்து மிளிரும் பான்மையிலும் பேசினார். "**கிட்லர் இங்கிலாந்திற்கு வருவாரென யாமும் எதிர் பார்க்கின்றோம். நம் கடல் மீன்களும் எதிர் பார்க்கின்றன.**" என, சர்ச்சில் அவர்கள் கூறினார்கள். இங்ஙனம் சர்ச்சில் அவர்கள் கூறிய நயவுரைகளைக் கேட்டோர் கையொலி செய்து ஆர்ப்பரித்தெழுந்தனர். இங்ஙனம் அறிவாற்றல்வாய்ந்த சர்ச்சில் அவர்களைத் தலைமை அமைச்சராகப்பெற்ற பிரித்தானியர் சர்ச்சில் அவர்களால் தட்டி எழுப்பப் பெற்று வீறு கொண்டெழுந்தனர். மேற் கூறியாங்கு இறுமாப்புரைகளையும் நகுமொழிகளையும் நவின்று நின்று கொடுமை விளைத்த கிட்லரை வீழ்த்தினர். இஃதன்றோ அறிவுடைமை ஆண்மையுடைமையென உலகம் இன்று அவர்களைப் போற்றுகின்றது.

---

# சமயவாழ்வு வேண்டுமா?

மதுரை, திருஞானசம்பந்தர் மடத்தைச் சார்ந்த
மறைத்திரு. மாணிக்கவாசகத் தம்பிரான் அவர்கள்.

இன்றைய உலகப் போக்கினை நோக்குவோமாயின், சமய வாழ்வு வேண்டுமா? என்ற வினா எழுகின்றது. இவ்வினாவிற்கு வேண்டும் என்ற விடைதான் இறுக்க வேண்டியவர்களாக விருக்கின்றோம். இதற்குச் சான்றுகளாக, மேனாட்டுக் கொள்கைகளையும், அவைகளைக் கையாளும் முறைகளையும் துருவி ஆய்வோமாயின் உண்மை சிறிது நமக்குப் புலனாகும். இவண் முதலில், விரைந்த மாற்றத்தை எல்லாத் துறைகளிலும் பெற்றொளிர்வதாகக் கருதப்படும் உருசியாவைப் பற்றிச் சிறிது பார்ப்போம்.

சார் ஆட்சியின் கொடுமையினாலே உருசியாவில் பொதுவுடைமை யாட்சி புகுந்தது. மக்களின் ஆதிக்கம் வளர்ந்து செழித்ததனால் சார் அரசன் வீழ்ச்சி யடைந்தான். பின்னர்ப் பொதுவுடைமை உருசியா முழுவதும் பரவலாயிற்று. அங்ஙனம் பரவிய பொதுவுடைமையின் கொள்கைகள் இது வரையிலும் எத்திறத்தில் கையாளப்பட்டு வந்திருக்கின்றன என்பதையும், அவற்றால் அந்நாட்டு மக்கட்கு விளைந் துள்ள நலன்கள் எத்துணை என்பதனையும் பற்றி நாம் ஆராய வேண்டியது இன்றியமையாத தாகின்றது. உருசிய நாட்டிற்குச் சென்று அவண் நிகழும் ஒவ்வொரு செயலையும், நடைமுறைகளையும், பழக்க வழக்கங்களையுங் கண்ணுற்று அவைகளைப்பற்றி நூல்களில் எழுதி நமக்கெல்லாம் வெளிப்படுத்திய சில அறிஞர்களின் கூற்றுக் களைக் கொண்டே யாம் ஒருவாறு தெளிய அறிகின்றோம். மஸானி என்பவர் அங்கே சென்று வந்து அவைகளைப்பற்றித் தான் எழுதிய நூலில் கூறுவதாவது: "பொதுவுடைமை அனுபவத்திலில்லை" அஃதாவது, பொதுவுடைமை எங்குத் தோன்றியதோ அங்கே அது நன்கு நடைபெறவில்லை என்பதே யாகும். அனுபவத்தில் அப் பொதுவுடைமையை யாண்டும் நடைமுறைக்குக் கொண்டு வருவதும் அரிதாகும்" எனக் கூறியுள்ளார். மற்றொருவர் ஸ்டாலினைச் சந்தித்துப் பேசியபோது, 100-க்கு 50 விழுக்காடு (State Governor) ஸ்டேட் கவர்னரிடம் போகிறதென்றும், எஞ்சியுள்ளதைத் தான் பொது மக்கள் அடைகின்றன ரென்றும், ஊதியம் பெற்று வாழ் வோரின் சம உரிமை இருக்க வேண்டும் என்ற பெரிய நோக்கங் கொண்டு தொடங்கிய கட்சி, இன்றைக்கு, ஊதிய உயர்வு, இழிவு குறித்து, உரிமை உயர்வையும், இழிவையுங் கொண்டு இலங்குவதாக மாறி விட்டது என்றுங் கூறியுள்ளார். இது "இலர் பலராகிய காரணம் நோற்பார் சிலர், நோலாதார் பலர்" என்ற பொய்யா மொழிக்கு இலக்கியமாகத் தெரிகின்றது.

(தொடரும்)

# கொல்லிமலைச் செலவு.

ச. கணபதி, ஆசிரியர், பெருநிலக் கிழவர் உயர்நிலைத் துவக்கப்பள்ளி, துறையூர்.

(முற்றொடர்ச்சி : துணர் 21, மலர் 6, பக்கம் 147)

**தரைச் செலவு :—**

பார்த்திப ஆண்டு, ஆடித் திங்கள் பதினேழாம் நாள் காலை யாங்கள் எழுவரும், (வானொலி உதவி பத்திராதிபர் 1. திரு. 'சிட்டி' எனும் புனை பெயரினர், ஓரியந்தல் சேமிப்பு நிதி உதவி அமைச்சர் 2. திரு. சீநிவாசன், அந் நிதியின் தாளாளர் (Clerk) 3. திரு. பால சுப்பிரமணியன், துறையூர் கிராம ஊழியன் பதிப்பாசிரியர், 4. திரு. A. V. R. கிருட்டினசாமி ரெட்டியார், கிராம ஊழியன் அச்சகத்தின் அலுவலர், 5. திரு. சோமசுந்தரம், 6. கிருட்டினசாமி (கம்பவுண்டர்), 7. ச. கணபதி ஆசிரியர், பெருநிலக்கிழவர் உயர்நிலைத் துவக்கப் பள்ளி, துறையூர். முற் கூறிய மூவரும் திருச்சி. நாங்கள் நால்வரும் துறையூர்.) துறையூரிலிருந்து பிற்பகல் இரண்டு மணிக்கு உந்துவண்டி (Bus) யிலேறி வைரிச்செட்டிபாளையம் சென்றோம். அவ்வூர் துறை யூரிலிருந்து பன்னிரண்டு கல் தொலைவிலுள்ளது. அவ்வூரிலிருந்து கொல்லி மலைக்கு மூன்று கல் தொலைவு ஆகும். அப்பாளையம் சென்றதும் எம் நண்பர் எம்மை மலர்ந்த முகத்துடன் வரவேற்றார். அவர் பெயர் திரு. வேங்கடாசலம் ஆகும். முற்கூறியுள்ள கிருட்டின சாமிக்கு இவர் மைத்துனக் கேண்மையினர். அன்றிரவு வானம் முகிலால் சூழப்பட்டுச் சிறிது மங்கலாயிருந்தது. அது கருதி அப்போது செலவிருந்த மலைச் செலவு நிலவு வெளிப்பட்ட பின் செல்லலாமென மாற்றி வைக்கப்பட்டது. நண்பர் இல்லில் இரவுணவு கொண்டு முன்னிரவை உரையாடிக் கழித்தேம். பின்னிரவில் இருமணி நேரம் சிறு துயில் கொண்டோம். இல்லோர் மலைச் செலவிற்கு வேண்டிய உணுப்பொருள்படுக்கை,முதலியவற்றை ஆயத்தம்செய்வதில் முனைந்து நின்றனர். முன்னிரா முழுவதும் மழை பெய்தது. இஃது எங்கள் நன்மைக்கே யாம். என்னெனில் மலையில் தேக்க நீர் இருப்பின், அதில் கட்டுக்கிடைப் பொருள்கள் (இலை, காய், கனி, சருகு) விழுந்து அழுகி, மலேரியா எனும் நச்சுக் காயலை ஆண்டுச் சென்று அந்நீர் பருகும் நிலவாணர்கட்கு ஏற்படுத்தும் என்பர்; ஒரு பெருமழை பெய்து அவ் வழுகிய தேக்க நீர் வெளிச் சென்றால் அந்நோய் வராது என்றும் அம் மலையிடைச் சென்று பழகி வந்தவர் பகர்வர். இரவில் தரையிலும் மலையிலும் பெய்த பெருமழையால் மலைத் தேக்க நீரும் அலை அருவி மூலம் வெளியேறிச் சென்றது.

**மலைச் செலவு :—**

வானில் நிலவு வெளிப்பட்டது; யாங்களும் இல்லிலிருந்து வெளிப்பட்டோம். எங்கட்கொரு 'கட்டை வண்டியும்' 'உணவு படுக்கை கட்கொரு' மொட்டை வண்டியும் வீட்டிற்கு முன் நின்றன. எங்களோடு வீட்டுக்குரியார், அவர் பண்ணை பார்க்கி ஒருவர் ஏனை இருவர் ஆக நால்வரும் சேர்ந்தனர். பொருள்கள் ஒரு வண்டியில் ஏற்றப்பட்டன. அனைவரும் வண்டியில் ஏறி அமர்ந்தேம்; அவையும் புறப்பட்டன. வைகறைப் போதில் தாழ்வரை (அடிவாரம்) வந்து சேர்ந்தோம். அங்கு 'பசலைக் கோம்பை' என்னும் ஊரொன்று உளது. அதில் ஏறத்தாழ இருபது வீடுகளே உள்ளன. அவ் வீடுகளிலும் இரண்டொன்றைத் தவிர ஏனைய பூட்டப்பெற்றிருந்தன. அதன் காரணம் மலையோரங்களிலுள்ள நிலங்கள் அருகுள சிற்றூர் மக்களுக்குரியன. அஃதே போன்று எங்கள் அருகுள பாளைய ஊர் நண்பருக்கும் இங்கு நிலங்கள் உள. நிலத்திற்குரியோர் இந்நிலங்களை மூன்று நான்கு கற்களுக்கு அப்பால் இருந்து வந்து பயிரிடுவதில்லை. மலைவாணரே இவைகளைப் பயிரிடுவர். அவ்வாறு பயிரிடும் மலைவாணர் பயிர் அறுவடை நாட்களில் மட்டும் ஏறத்தாழ இரண்டு மூன்று திங்களே (பசலிக் கோம்பையில்) இங்குத்தங்கி, ஏனைய ஒன்பது பத்துத் திங்கள் மலை மீது வாழ்வர். அறுவடை, பயிரடை அல்லாக் காலத்தில் நாங்கள் அவண் சென்றதால் அவர் இல்லங்கள் அனைத்தும் பூட்டப்பெற்றிருந்தன. இச் செய்திகளை என் நண்பர் கூறவே, எனக்குக் 'காடாறு திங்கள்' நாடாறு திங்கள் ஆண்ட விக்கிரமாதித்தன் வரலாறு நினைவிற்கு வந்தது. முதல் நாளே எம்முறு நண்பர் எம்வரவைப் பசலைக்கோம்பையிலுள்ள பண்ணையாட்களாகிய மலைவாணர் இருவர்க்கு அறிவித்து, மலை ஏறுகைக்கு ஆயத்தமாய் இருக்கப் பணித்தார். அதன்படி இரு மலைவாணர் எம்மை எதிர் நோக்கியிருந்தனர்.

**மலையேறுகை :—**

எங்கள் படுக்கை, உணவுப்பொருள்களை மலைவாணரிருவரும் தலையிற் சுமந்து எங்கட்கு முன்னே வழிகாட்டிக் கொண்டே விரைந்தேறினர். யாங்களும் அவரைப் பின்பற்றிச் சிறிது தொலைவுமலை ஏறினேம். கதிரவனும் தன்பன்னரும் கதிர்களைப் பரப்பிப் பாயிருள் பருகிப் பகல்கான்று எழுந்தான். அவ்வமயம் யான் மலைச்சரிவிலிருந்தே தாழ்வரை, நடுவரை, முடிவரை நோக்கினேன். ஓர் ஆயிழை மங்கை தன் உடல் முழுவதையும் ஒரு நீலப்படாத்தாற் போர்த்துத், தன் ஒளி முகத்தையும் திருவடியையும் காட்டி நிற்பதைமான மலையன்னையும் தன் உடல் அனைத்தையும் நெருங்கி, அடர்ந்து, செறிந்து, ததைந்து, ஆர்ந்து பச்சைப் பசேலென ஒளிவிட்டு மின்னி விளங்கும் பசிய மரம், செடி, கொடியாம் பச்சாடையால் போர்த்துத், தன் தாழ்வரைத் திருவடியையும் உயர்வரை ஒளி முடியையும் காட்டி நின்ற காட்சி என் கண்ணையும் கருத்தையும் ஒருங்கு கவர்ந்தது. இயற்கை அன்னையின் இன்ப எழிலில் சிக்கி, மலைச்செலவறியாது, கள் மாந்தியவனைப்போல் கருத்தழிந்து மயங்கி இருந்தேன். மற்றையோரும் சற்றே தங்கினர்.

அவண் இரண்டொருவருக்கு நீர்வேட்கை மிக்கது. முன்னெச்சரிக்கையோடு நாங்கள் இருநீர்க்கலனும் (Water Pans) ஒரு ஒளிப்படக் கருவியும் (Camera) ஆட்கொரு ஆடைபொதிந்த பையும் எடுத்து வந்தேமாகையால் நீர்வேட்கை தீருமட்டும் அவர்க்கு நீருணக்கொடுத்தோம். வழிகாட்டிகள் சுமை தலைக்கொண்டு எமக்குப் பலஇடங்கள் செடிகள், கொடிகள், மரங்கள் முதலியவற்றின் பெயர்களையும், தன்மைகளையும்கூறி எங்கட்கு முன் ஏற நாங்கள் அவர்க்குப்பின் ஏறினேம்.

**என்மனத் தெழுந்த எண்ண அலைகள் :—**

மலையில் சிற்சில இடங்களில் செங்குத்தான பாறை மீதேறியும், பள்ளச் சரிவில் மெல்ல இறங்கியும், பசுமரச் செறிவினுள் பணிந்து புகுந்தும், காடு முட்புதர்களைக் கடந்து நடந்தும் செல்லும்போது வாழ்வில் ஏற்படும் இன்ப துன்பமெனும் மேடுபள்ளங்களும், மனக் கவலைகளாம் முட்புதர்களும் என்மனக்கடலில் எண்ண அலைகளாகத் தோன்றித்தோன்றி எனை அலைத்து நின்றன, என் நிலை இவ்வாறாக இரண்டொருவர் வழிநடைக்களைப்பால் கால் கை சோர்ந்து இயற்கை அன்னையின் மடியில் சிறிது துயில் கொண்டாலும், அன்னையின் இன்ப எழில் அனைவரையும் உச்சிக்கு ஈர்த்துச் சென்றது.

**தேன்பாறை :—**

சிறிது தொலைவு சென்றேம். வழிகாட்டி ஓரிடம் வந்ததும் தேன்பாறை! தேன்பாறை! என்றான் நான் "இதோ! வந்தேன்! வந்தேன்!! எனக்குச் செந்தேன், கொடுந்தேன்!! நின் அருகே நின்றேன்! நின்றேன்!! தேன் பெறின்மேல் வருந்தேன்! வருந்தேன்!! அப்பால் உய்ந்தேன்! உய்ந்தேன்! பாறையின் அருகே இருந்தேன்! தேன் பாறையையும் பார்த்தேன்! கண்டேன்! உளமகிழ்வு கொண்டேன்!" என்றிவ்வாறு பலப் பல சொற்றேன். வழிகாட்டியோ, நீர் கேட்டதை நான் அறிந்து கொண்டேன்.! கொண்டேன்!! ஆனால் இலைதேன்! இலைதேன்!! என்றான். காரணம் என் எனக்கருதி வினவினேன். அதற்கு அவன் ஆழ்ந்துள ஒரு பள்ளத்தாக்கையும், அருகுள ஒரு கானியாற்றையும் கையாற்சுட்டி, அப்பாலுள்ள உயர் மலைக் குவட்டையும் உடன் காட்டி, பள்ளத்தாக்கு, கானியாறுகளைக் கடந்து சென்று, உயரிய குவட்டில் ஏறித் தேனை எடுத்துக் கலத்திற் பெய்து, கயிற்றில் அக்கலத்தைக் கட்டி ஆழ்ந்துள பள்ளத்தாக்கில் இறக்குதல் ஈண்டைய வழக்கம் என்று சொன்னான். இறக்கிய தேனைக் கீழேயுள்ள ஆள் பாதுகாப்பான். மேலவன்றானும் மெதுவாய் இறங்க இருவரும் தேனை எடுத்துச் செல்வர் என்றும் தொடர்ந்து கூறினான்.

நான் உடனே அவனை, ஆசை காட்டி எனை மோசம் செய்தாயே என்றேன்; அதற்கவன் எட்டாத் தேனுக்குக் கொட்டாவி விட்டால் கிட்டுமோ கூறீர் என்றே இயம்பினன். நானும் அதனை உண்மையென்றே ஒப்புக்கொண்டேன். முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்ட வரலாற்றிலும் விந்தையாயுளது அனைத்துறுப்பும் குறையாது

பெற்று நிற்கும் நம் தேன் வரலாறு என்றேன். வழிகாட்டி கூற்றைக் கேட்டதும் என் மனத்தில் அகலாதிருந்த அருந்தேன் இதோ மறைந்தேன் மறைந்தேன் என்று கூறி மறைந்த மாயம் எனக்கே புரிந்திலது.

**இழவு சொல்லிப் பாறை :—**

எஞ்சி நிற்கும் எங்கள் மலையேறும் முயற்சியில் நாங்கள் எங்கள் மனத்தைச் செலுத்தினேம். ஒரு குவட்டின் ஒரு பக்கம் ஏறி மறு பக்கம் இழிந்தேம். மேலும் ஏறிச் சென்றேம். செல்லும் வழியில் மீண்டுமோர் கரும் பாறையைக் கண்ணுற்றேம்; இங்கு, பாறையின் பரப்பில் சிறிது நேரம் தங்கி இளைப்பாறினேம். இப்பாறையின் பெயர் 'இழவு சொல்லி' யென இயம்பினர் எங்கள் நல்வழி காட்டிகள். அன்றியும் மலைமிசையுள்ள சிற்றூர்களில் எவரேனும் உறவினர் இறந்தால், இச்செய்தியை தாழ் வரையிலிருந்து ஏறத் தாழ மூன்று கல் தொலைவில் உயர்ந்து நிற்கும் இப்பாறைக்கு வந்து நின்று உரக்கச் சொல்வர் உயர் மலைவாணர். இறந்த செய்தி அடிவரை ஊர்கட்குத் தெளிவாகக் கேட்கும் என்ற காரணம் குறித்தே இப்பெயர் ஏற்பட்டது என்றும் எடுத்துரைத்தனர் எம் மலையாளிகள்.

**இயற்கை எழில் :—**

இப்பாறை நீத்து இன்னும் சிறிது உயர ஏறினேம். ஏறும் வழியில் பள்ளச் சரிவில் ஒரு சிறு மலை யருவியைக் கண்ணுற்றேம். அச்சரிவதனில் அனைவரும் நின்று, காலைக் கடன்களைக் கருதி முடித்தேம். நான் அச்சரிவைக் கூர்ந்து நோக்கினேன். நின்ற மேட்டிலிருந்து நிலம் நாற்புறமும படிப்படியாகத் தாழ்ந்திருந்து செந்நெற் பயிர்களைத் தன் மேற்பெற்றுச் சீர்பெறத் திகழ்ந்தது. இயற்கையில் செயற்கை இணைந்து நிற்பதை இங்குக் கண்டேன்.

மலையன்னை இயற்கையாய் எங்கும் மலைவெளிகளில் பரவி நிற்கும் பாறை வெளிகள் பச்சைக் காடுகளெனும் இயற்கை எழிலாம் முகத்தையும், அக்காடு வெட்டிக் கரம்பு திருத்திப் புன்னிலம் போக்கி நன்னிலமாக்கி வருபுனல் பாய்ச்சி வளநற் பயிராக்கிய செயற்கை அழகாம் பவளத்தையும் இடை மிடைந்து செயப்பெற்ற அம்மணி மாலையை அணிந்து நின்று நிமிர்ந்து உயர்ந்து தோன்றும் காட்சி ஒரு பேரழில் மங்கை தன் கழுத்தில் முத்திடைப்பவளம் மிடைந்து கோத்து யாத்த ஆயிழை மாலையை அணிந்து நிற்றலை மானும்!

**கடம் பலம் வருகை :—**

முன்னர் வழி காட்டியும், அவர் பின் நாங்களும் முறையாய் ஏறினேம். வழியில் இருக்கும் கடுக்காய், திரணி முதலிய மரம் செடி கொடிகளைக் காட்டிச் சென்றனர் எம் வழி காட்டிகள். நாங்கள் அவற்றருகு சென்று, காய் இலை மரம் செடி அனைத்தும் பார்த்தேம். வழிகாட்டி விரைவில் ஏறுக; இன்னும் சிறிது தொலைவில் கடம் பலம் என்னும் சிற்றூர் உளதென நாங்களும் விரைந்து ஏறிச் சென்றேம், செல்லும் வழியிலவர் சொல்லிய பெயரை நான் மறந்து, மாம்பலம்

இன்னும் எத்துணை கல் தொலைவில் உள்ளது என்றேன். அன்னவர் தாமும் நான் கேட்டதைக் கவனியாது இதோ! ஆய்விட்டது; இன்னும் சிறிதே தொலைவுள தென்றூர். என் நண்பர் நகைச் சுவையாளர் (Witty) சிட்டி என்பார் மாம்பலம் இங்கிருந்து இருநூறு கல் தொலைவிற்கு அப்பால் சென்னையிலுளது என்றே செப்பினர். மற்று எல்லோரும் 'கொல்' லென்று சிரித்தனர்.

**உணவு உண்ணுகை (காலைச் சிற்றுண்டி) :—**

பிறகு, கடம்பலம் வந்து சேர்ந்தோம். அவ்வூர் ஒரு உயர்ந்த மேட்டில் அமைந்துளது. நாங்களும் ஆங்கோர் உயர்ந்துள கற்பாறை மீதமர்ந்து பலா, வாழைப்பழங்களைத் தின்றோம். தாழ் வரையில் மேலே சென்று ஒருவரும் வயிறு நிறைய உணவு, பழங்களை உட்கொளக் கூடாது, மீறி உண்ணின் அவை ஊறு செய்யும் என்றே நாங்கள் முடிவு செய்திருந்தேம். ஆனுல் பசிக்களைப்பும் கனி மீதுள்ள ஆர்வமும் கூடி எங்கள் முடிவை எங்கோ இழுத்துச் சென்றன. வயிருர, மனமார வேண்டுமட்டும் அனைவரும் உண்டேம்.

வழிகாட்டிகள் இத்தோடு முக்காற் பங்குத் தொலைவு நீங்கிற்று. ஏறுந் துன்பமும் இனியிலா தொழிந்தோம். இனி வரும் வழிகள் இறக்க நேர்வழிகள் என்றனர். கால்வலி, உடல்வலி கழிந்தினி நமை விடும் என்று இயம்பி இறங்கிச் சென்றோம். அவ்விறக்கந் தனில் ஒரு நீர்யாறு ஓடி வந்தது. அதன் பெயர் கதவடி மூலையாறென்றனர். அன்னதன் கரையில் அமர்ந்து நாங்கள் காலைக்காஃபியைக் கருதிப் பருகினேம். எந்தம் ஆட்கள் பலவின் கொட்டையைப் பாங்காய்ச் சுட்டு, எங்களுக்கிட்டுத் தாங்களும் உண்டனர்.

**வழிக் காட்சிகள் :—**

அனைவரும் உண்டபின் செலவைத் துவக்கினேம். அந்நீர் யாற்றின் கரை வழி ஏகினேம். கரையிலுள்ள கருங்கற் பரப்பாம் வழியில் நடந்து, அதன் எழிற் பரப்பை அனைவரும் வியந்தேம். பாறைப் பரப்பைக் கடந்து நடந்தேம். இப்போது நாங்கள் நல்வழி அடைந்தேம். அவ்வழி மருங்கில் அழகிய காட்சிகள், நீர் நில வளங்கள் நிறை நன் செய்கள்; படுகை வயல்கள்; செந்நிறம் பொன்னிறம் கலந்து சிறந்த பசைபெறு நன்மணற் பாங்கர் நிலங்கள் ஆம் இந்நிலங்கள் அனைத்தும் கண்டேம். இவ்வகை நிலங்கள் இவண் இனிதுறையும் செவ்விய மலையில் வாழுநர்க்குரியன.

**கடம்பலத்தின் கீழ்த்திசைக் காட்சிகள் :—**

கடம்பலத்திற்கு அப்பாற் செல்வோம். அவ்விட நிலங்கள் வளமை குறைந்த வறிய நிலங்கள்; பாறை நிலங்கள்; வன்பார் நிலங்கள்; கட்டாந் தரைகள்; மரம், செடி, கொடி, புதர், கல், புல் நிறைந்த காட்டு நிலங்கள். ஆயினும் அங்கு வானளாவிய மரங்களைக் கொடிகள் சென்று படர்ந்து இறுகிப் பின்னிப் பின் ஒன்ருய் நின்ற காட்சிகள்தமை நான் காணும்போது, காதலன் தோள்களைக் காதலி தானும் கட்டிப் பிடித்து ஆகம் தன்னை இன்புறத் தழீஇ அக

மகிழ்வெய்தி, ஈருடல் ஓருயிர் எனவே இணைந்து இன்ப நிலத்தில் நிற்கும் நிலையை எண்ணிஎண்ணி இருமகிழ்வுற்றேன். அக்காட்சிகளைப் பற்றி இன்னும் சிறிது இயம்புவன் கேளிர். பலப்பல மரங்கள்; பலப்பல நிறங்கள் இனும் சில கொடிகள் இனிய பல வண்ணங்கள்; பச்சைப் புற்கள் பசுங்கிளி நிறங்கள் என்றே இவைகள் இன்பெழில் ஈந்தன.

**மலைவளங் காண்கை :—**

கடம்பலத்திற்கு இப்பால் வருவோம். மா, பலா, ஆரஞ்சு, மலைமிகுவாழைகளும், அவையடி வளரும் நவையில் காஃபிச்செடியும், கருங்கொடி மிளகும், இனிய நல்ல நனிபல ஏலக்காய் கொடிதானும் கவினுறக் கலந்து, அந்நாசிச் செடியும் அண்மையில் முளைத்து நிற் கின்ற காட்சிகளைக் காணுந்தோறும் பசுங்குழவி தன்னைப் பாங்காய்த் தன்னுடை இடையிலும் தோளிலும் மடியிலும் மார்பிலும் தவழ்ந்து விளையாடத் தான் கண்டுகளிக்கும் கழிபேருவகையும், தன் சிறு மகவை இன்புறத் தழீஇ, வயிற்றின் கீழே வைத்துத் தாவும் கருமுக மந்தியின் மகிழ்ச்சிப் பெருக்கும், கங்காரெனும் ஒரு இங்கிலா விலங்கு தன்னுடைக் குட்டியை வயிற்றடிப் பையினுள் வைத்துப் பேணும் வகை வகை வனப்பும் ஒத்த காட்சிகள் என் எண்ணக்கடல்களில் மோதி அலைத்து உள்ளத் துவகையை உந்தி எழுப்பின.

உடனே நான் வழிகாட்டியை நோக்கி, காஃபி முதலிய செடிகள் ஏன் மரங்களின் அடிகளில் வளர்க்கப் பெறுகின்றன ? எனக் கடாவி னேன். அதற்கு அன்னவனும் அச்செடிகளுக்கு நறுநிழல், தண்மை நனி மிக வேண்டும் ; ஆகையாற்றான் அச்செடி வகைகள் மரத்தடி நிழலில், மார்பிலும் மடியிலும் தவழ்தரு மகவுபோல் வளர்க்கப் படுகின்றன என்றிவை எடுத்துக் கூறி விளக்கினான். என் மனத் தெழுந்த ஐயமும் அகன்றது.

நேரிய வழியில் எங்கள் கூரிய விழிகளைச் செலுத்தி விரைந்து ஒருவர் பின் ஒருவராய்ச் சென்றுகொண் டிருந்தேம். அன்ன தன் காரணம் இன்னதெனச் சொல்வேன். ஆண்டுச் செல்வழி ஒருவர் செல்வழியே யாகையால் அந்நடை வழியில் யாங்கள் அவ்வாறு மென் மெல நடந்தேம். அவ்வழி யிடை யிடை செவ்விய சிறு சிறு நீர் செலும் அருவிகள், அந்தண் அல்லிக் குளங்கள், கான்யாறுகள், கருதும் நீரோடைகள், நறுநீர்ச்சுனைகள், வரு புனல் வயல்கள் என்றிவை பலவும் இன்கணுற் கண்டேம். அப்போ தெமக்கு வடபால் இருந்து ஒரு பெரும் நீரொலி கேட்டது. என்னெனத் திரும்பி அத் திசை நோக்கினேம். பெரு நீர்வீழ்ச்சி விழுமுறை பார்த்தேம். எம்முடை நண்பர் மாசி மலையில் இருந்து அந் நீர்வீழ்ச்சி விழுவதால் அதன் பெயர் மாசி மலை நீர்வீழ்ச்சியாமெனச் சொன்னார்.

**சிற்றூர்த் தோற்றம் :—**

சமவெளி கடந்து, உயர்வெளி ஏறி, கீழ்வழி இழிந்து, பின்னரும் உயர்வெளி அயர்விலாதேறி அங்குளக் காட்சிகள் அனைத்தும் கண்டேம். சரிவா மிடங்களில் பல பல சிற்றூருள. அச்சிற்றூர்களில்

இங்குள்ளனபோல் அழகிய மாடி வீடுகள் கிடையா. எங்கு நோக்கினும் இயற்கையோடியைந்த இன்பச் சிறுகுடில்கள். அச்சிறு குடில்களில் அழகுறும் இயற்கையொடு ஒன்றிச் சிறு நல்லின்பச் செம்மை வாழ்வினைச் சீர்பெற நடாத்தும் கள்ளம் சிறிதுமில் வெள்ளை யுளத்தராய் உறைந்து வாழும் உயர் பெரும் பண்பினர், பொல்லாப் புதுமுறை நாகரிகம் புகுது முறையில்லாப் பழந்தமிழர் நாகரிக வாழ்வை இப்பாரோர்க்கு எடுத்துக் காட்டும் தன்மையில் உள்ளனர். அன்னவர் தாம் மலைவாணராவர்.

**அரப்பளீசர் மலை செல்கை :—**

இயற்கைத் தோற்றங்களைக் கண்டுள மகிழ்வு கொண்டே ஏறிப் பின் இழிந்து சென்றேம். அரப்பளி ஈசர் தம் சிறப்புறு மலைக்கு அயலுள சிற்றூர் வாழுநர் சிலர் பலர் ஆடி பதினெட்டு விழாவைக் காண முன்னும் பின்னும் முறை முறை சென்றனர். யாங்கள் அன் னவர் தங்களை நோக்கி ஐயீர்! அரப்பளியீசர் தம் கோயில் இன்னும் எத்துணை தொலைவில் உள்ளது என்றனம். அவரும் அருகில் வலப்பூ ரெனுமோர் பேரூர் (நாடு) உளது. இந்நாட்டிற்குப் பல சிற்றூர்கள் உள்ளன. அதற்கப்பாலொரு கூப்பிடு தொலைவில் அந் நற்கோயில் அமைந்துள தென்றனர். நாங்கள் அவர்க்கு நன்றி கூறிப் பின்னரு மலைமீதொருமுக டேறினேம்.

**மீன் றுறைப்பள்ள நீரருவி :—**

அம் முகட்டடியில் ஒரு சிறு மலையருவி ஓடிச் செல்வதை உவகை யொடு கண்டோம். அதன் பெயர் என் என வினவ, 'மீன் துறைப் பள்ளம்' என்று சிலர் சொற்றனர். அருவியில் நாங்கள் அனைவரும் இறங்கி அம் மீன் கண்டேம். நீரில் மீன்கள் மிகுந்து, துள்ளித்துள்ளி எங்கள் உள்ளத்துவகையை உந்தி எழுப்பி மகிழ்ச்சியுறச் செய்தன. மகப்பெறுப் பெண்டிர் மிகப் பலர் வந்து மகவைப் பெறவே அம் மீன் பிடித்து மூக்குக்குத்தி நீர்க்குள் விடுவர் என்றும் ஒரு சிலர் எடுத் துரைத்தனர். நாங்கள் அவ்வருவியைக் குறுக்கே கடந்து அப்பா லுள்ள மறு கரை அடைந்தேம்.

**அரப்பளீசர் கோயில் சேரல் :—**

கரைக்கும் மேலே ஒரு சிறு குவட்டில் உளதாம் ஆலயம் அடைய மலையின் படியில் மலையா தேறினேம். கோயில் இடத்தைக் குறுகி னின்றேம். நின்று நாற்புறமும் நோக்கினேம். அவ்விடம் கொல்லி மலையின் நடுப் பகுதியாகையால் மலையின் நாற்புறப் பரப்பிலுமுள்ள நல்வளங்களெல்லாம் கண்ணுக்குத் தெளிவாகக் காட்சி யளித்தன. இயற்கை அன்னை தன் எழிலை மேலும் மிகுத்துக் காட்டினாள்.

**ஆகாய கங்கைக்குச் செல்கை :—**

மலை உச்சியை அடைந்தநேரம் நண்பகலாகும். அப்போது காலையி லேயே வந்த மக்களிற்சிலர் தந்தம் அருகுள்ள அயல் ஊர்கட்கு இறங் கிச் சென்றனர். எஞ்சியிருந்த மக்கள் கோயிலுள் சென்றுகொண்டும்,

வெளி வந்துகொண்டு மிருந்தனர். அங்காடிகள் சில அங்கேயிருந்தன. நாங்கள் மூவரை உணவு அட ஏற்படுத்திய பின் ஆகாய கங்கைக்கு நீராடச் சென்றேம்.

**நீர்வீழ்ச்சிக்குச் செல்லும்வழி :—**

அவ்வாகாய கங்கை அருவி ஒரு ஆழ்ந்த பள்ளத்தாக்கில்பாய்ந்து செல்வதால் நாங்கள் இருந்த இடத்திலிருந்து மலைச்சரிவு வழியாக இறங்கி அதை அடைய வேண்டும். ஆகையால் சரிவு வழியைச் சார்ந்து இறங்கினேம். அவ்வழி ஓரிடத்தில் செங்குத்தாயும், பிறிதோரிடத்தில் சரிந்தும் சாய்ந்தும், மற்றேரிடத்தில் மரங்கள்செறிந்து இருள் கவிந்தும், இன்னேரிடத்தில் முட்களும், புற்களும், கருங்கற்பாறைகளும், காய்ந்த மரக்கட்டைகளும் இடையே விராய், பூண்டும் புதரும் யாண்டும் நிறைந்தும் நின்ற காட்சிகளைக் கண்டுகொண்டே இழிந்தோம் ; கீழுலகத்திற்கு (பாதாளம்) செல்வதைப் போலவே இருந்தது. இடுக்கண்கள் நிறைந்த இவ்வழியிற் செல்லுங்காலத்து எனக்கு ' சித்பவாநந்த அடிகள் ' கைலாயயாத்திரை எனும் பொருள் பற்றி, ஆற்றிய சொற்பொழிவில், "கங்கையாறு இமயமலையில் தோன்றிக் கற்பாறைகளில் குதித்துப் பாய்ந்து சென்று பேரொலி எழுப்பிக் காண்போர் கண்ணையும் மனத்தையும் ஒருங்கு கவர்ந்து செல்லும் தன்மையிலுள்ளது" என்று கூறியகூற்று நினைவிற்கு வந்தது. மேலும் அவர் அக்கங்கையாற்றின் கரையில் தாம் சென்றபோது, அவ்யாறு மிக ஆழத்தில் கண்ணுக்கெட்டாத தொலைவில் பாய்ந்து சென்றதைப் பார்த்துத்தான் அஞ்சியதாகவும், ஏறிச் செல்லுங்கால் எவரேனும் கால் இடறிக் கீழே விழுந்தால் அங்கு அவரைக் காணவியலாது கண்ணிமைப்பிற்குள் சுக்கு நூருகிச் சிதைந்த அவர் எலும்புகள் நீர்ப்பரப்பின் அடி இடத்தில் ஆழ்ந்து கிடக்க அவைகளை ஓரிடத்திலும் தங்கவிடாது நீர் உருட்டிக்கொண்டு வேகமாகஓடும் என்றும் சொல்ல இருமுறை கேட்டுளேன்.

எங்கள் வழியில் இடுக்கண்கள் மிக்க இடங்களில் செல்வோர் தற்காப்பிற்காகச் செங்குத்துப் பாறைகளில் படிகள் வெட்டியும், ஒரு மருங்கில் இருப்புக் கம்பிகள் அமைத்தும் சிறிது நலன் செய்துளர் கடவுள் அன்பர்கள்.

(தொடரும்.)

# ஊழ்வினையும் ஆள்வினையும்.

திரு. K. சோமசுந்தரம் பிள்ளை, B. A., B. L., அவர்கள்.

ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி என்பன ஒரு பொருட் சொற்கள். முன்பு செய்த வினைகளின் பயனால் பின்பு விளையும் விளைவே ஊழாகும். இஃது செய்வினை செய்தவனையே அணுவுந் தவறாது சென்றடையும் நியதிப் பொருள். இந்நியதி, அறவினையும் அறமல் வினைகளாகிய வினைகளின் பயன்களைச் செய்தானையே தவறாது தேடிச் சென்றடையச் செய்து அவ்வப் பயன்களை அருட் சத்தியின் ஆணை வழி முறையே ஊட்டுவிப்பதோர் சடப் பொருளாகும். ஒருவர் செய்த வினை, தனது பயனை வழுவின்றி முறை பிறழாது பயத்தல் அறத்திற்கு மாதலான், மக்களியற்றும் அறவினைப் பயன் தெய்வத்தை நிமித்த காரணமாகவும் ஊழை உதவி காரணமாகவுங் கொண்டு எய்தப்படுதலின், தகைமையும் வகைமையும் நோக்கி, ஊழ் கடவுளெனப்பட்டு, தெய்வ மாதலுங் கருதற்பாற்று. அகிலத்தின்கண் பிறந்த எல்லா மக்களுயிரிடத்தும் உருவும், திருவும், இளமையும், ஒண்பொருளும் ஒரு வழி நில்லா தென்பது காட்சியிற் றெளியப் படுவதாதலினாலும், இன்ப துன்ப நுகர்வு அவரவர் பழவினை வழியே அளவு செய்யப்பட்டுள்ள தென்பது தெளியப்படுதலானும், ஊழென்பது வினைப்பயன் வீண் போகாது தீரும்வரை தொடரும் முறை யென்பது பெற்றும். எனவே 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனது' ஆணை யெனும் மாற்றொணு விதி வேறென்பதூஉம் தெளிந்தாம்.

செய்வினையும் செய்வானும், சேர்பயனும் சேர்ப்பானும் மெய் வகையால் நன்குணர்ந்த வினை யறிவு சான்ற தமிழ்ப் புலமை வாய்ந்த பெரு மக்கள் நலம் பயக்கும் நல்வினையே, மக்கள் விரும்பும் மாண் புடையதெனச் செவியறிவுறுத்தி, துன்பமே பயக்கும் தீவினையினை விலக்கப்படுவதென வற்புறுத்தி, மக்களும் அச்சுற்று அறத்தாறு கடைப் பிடித்தொழுகச் செய்வித்து, தாமும் அவ்வழி யொழுகிப் புகழ் நிறுவிப் போந்தனர். பரந்து படு நல்லிசையும் நல்லின்பமும் நல்கும் நல்வினை யொன்றே மக்கள் வாழ்க்கையினை அணியுறுத்து மென்பது,

'வாழச் செய்த நல்வினை யல்ல
தாழுங்காலைப் புணை பிறிதில்லை' (புறம்-367)

எனத் தமிழ் மூதாட்டியார் ஔவையாரும்,

'நல்லது செய் தலாற்றீ ராயினு
மல்லது செய்த லோம்பு மினதுதா
னெல்லாரு முவப்ப தன்றியு
நல்லாற்றுப் படூஉ நெறியு மாரதுவே' (புறம்-195)

என நல்லிசைப் புலவராய நரிவெரூஉத் தலையாரும்,

............பெரும் பெயர் நும்மு—
னீண்டுச் செய் நல்வினை யாண்டுச் சென்றுணீஇய
ருயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தனன். (புறம்-174)
என மாசறு நாவீறுடைய புலவராம் மாறோகத்து நப்பசலையாரும்,

............மயங்காது—
செய்தல் வேண்டு மானன்றே வானோ
ரரும் பெற லுலகத் தான்றவர்
விதும்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே. (புறம்-213)
எனப் புலமை சான்ற புல்லாற்றூர் எயிற்றியாரும்,

செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி
ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.
எனத் தமிழ் மறை தந்த தண்ணளியாளர் திருவள்ளுவனாரும் கூறிய வாற்றான் அறியப்படும்.

இங்ஙனம் இருமையும் பயக்கும் நல்வினை யடியாக வீடு பேறும் சித்தித்தலின், அந் நல்வினை யியற்றற்குத் திதின்றீட்டும் பொருளும் அதனை நாடற்குரிய அயரா முயற்சியும் இன்றி யமையாது வேண்டப் படுதலான், அவற்றைக் குறித்து ஓராண் மகன் தன் ஆண்மையினைத் தனித் துணையாகக்கொண்டு திண்மையுடன் செய்யும் பொருண் முயற்சிக்காக, தன் வாழ்க்கைத் துணைவியைப் பிரிந்தேகும் செலவு நலமே யென்றும் அஃது வினைவயிற் செல்லும் செலவெனவும் அறிவு நலமும் உலகியலும் ஒருங்குணர்ந்த தமிழ்ச் சான்றோரும் உறுதி கூறுகின்றனர். 'வினையே ஆடவர்க் குயிரே' என்பது குறுந் தொகையாகும். கண்ட வினைக்கட் டுளங்காது செய்யும் பொருண் முயற்சியினை வினை யெனவும், அதனில் அசையாது நிற்பதும் ஆண்மை யெனவும், நலம் பயக்கும் நல்வினையே முயற்சியாகிய நன்மையின் கண்ணே யுளதென்பதும் பழந்தமிழ் நூல்களில் குறிக்கப் பட்டுள்ளமை ஊன்றிச் சிந்தித்துக் கருதற்பாலதே. பொல் வினை நீக்கி நல்லாற்றில் விழைந்து தளராது முயற்சி செய்யும் சிறந்த தன்மையினையே நன்றுடை ஆள்வினை யெனத் தமிழ் மரபிற் பழகிய அறிஞர்கள் அங்க்ங்கும் வழங்குவாராயினர். இதனான் மாண்பய னெய்த ஊக்க மூட்டும் கருத்தாற் பிணைத்த இத்தகைய வினையுணர்வு களே ஆன்ற தமிழ் மரபிற் கின்றியமையா தெழுந்த அடிப்படையான அறக்கொள்கைகளாகு மென்னலாம்.

மாந்தர்க் குறுதியாம் மும் முதற்பொருளாய அறம் பொருள் இன்பமும் முன் செய்த நல்வினையால் செய்தானைச் சேருதலையும் இவற்றிற்கு நேர் மாறாயுள்ள, பாவம், வறுமை துன்பமும் தீவினை யால் வருதலையும் அறியாது, அவை மக்கள் பலர் தம் முயற்சியான் விளைந்த தென்பராகலின், அதற்காக அறக் கடவுளராகிய பெரு நாவலர், அறத்தின் காரியமாகிய பொருள் இன்பங்கட்குக் காரண மாகி நிற்கும் ஊழியல்பையும் அதனைப் பற்றி வகைதெரிந் தீண்டறம்

பூண்ட பண்டைத் தமிழர்கள் கொண்ட அடிப்பட்ட அறக்கொள்கைகளையும் வடித்து, சான்றோர் பழகு தமிழ்ச் சொல்லால், முடிந்த அறவாழிப் பெருநூலாம் தம் பொது மறையின்கண் ஊழியலில் தெரித்துள்ளார்.

வள்ளுவரது ஊழியல் விதியின் வலியினை எடுத்துக் கூறினும், அஃது இறைவன் மாட்டுள்ள ஒப்பற்ற அன்பினைத் தெளித்தலான், வீட்டின் பகுதியின வாய் நிற்கும், மற்றும் இஃது. உரமிகுந்த நிலம் மிகு பயன் கொடுப்ப தல்லாது விரைந்து கொடுத்தலே போன்று, நல்வினை தீவினைப் பயன்கள் முறைப்படி விரைந்து வரும் விதியும் உணர்த்தும் பெற்றிமையுள்ளது. அதன் பிண்டப் பொழிப்பு வருமாறு :—

ஆகூழ், போகூழ் என ஊழ் இருவகைப் படுமென்றும், இன்பமும் செல்வமும் நிலைப்பதற்குக் காரணம் ஆகூழென்றும், அழிவதற்குக் காரணம் போகூழென்றும், ஆக்கத்திற்கும் அழிதற்கும் ஏதுவான முயற்சியும் முயலாமையும், அறிவும் அறியாமையும் ஊழானகு மென்றும், பொருள் ஆதற்கு அறிவு இன்றியமையாதிருப்பினும் நூல்வாயிலாகக் கற்ற அறிவையும், இயற்கை யறிவையும் ஊழ் வேறுபடுத்தி, அவரவர்க்கு இயல்பாக ஊழானய யறிவே வலியுடையதாய் மிகுந்து நிற்கச் செய்யு மென்றும், பொருள் செயற்கு ஆவன அறிவு முயற்சி முதலான துணைக் காரணங்களிருப்பினும் செல்வம் காவற் படுதலும் அழிவதும் ஊழினாலாவதன்றி அத்துணைக் காரணங்களால் மட்டும் ஆவன வல்ல வென்றும் மற்றும் அறிவில்லாரையும் அழுக்காறுடையாரையும்,

"ஔவிய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்"

என்ற குறள் வெண்பாவில் அழுக்காறுடையார்க்கு வறுமையும் அழுக்காறில்லாதார்க்குச் செல்வமும் இயற்கையாய் அமைந்திருக்க வேண்டிய திருக்க அவ்வாறில்லாது அழுக்கா றேதுவாகச் செல்வமும், அழுக்காறின்மை யேதுவாக வறுமை யுளவாயிருப்பதைக் கூர்ந்து சிந்திக்கின் அவற்றிற்குரிய ஏது பழவினையன்றிப் பிறிது யாது என்றுணரப்படு மாகையால் 'நினைக்கப்படும்' என்ற சொல் வள்ளுவர் பெய்து வைத்த அருமை ஈண்டு, கருத்திற் பதிக்கற் பாற்று.

பொருளுடைய செல்வராக்குதலும் அவ்வூழே யென்றும், அத்தகைய பொருளைப் பெற்றாலும் அதனை நுகரற்குரிய ஊழும் இன்றியமையாது வேண்டப்படு மென்றும், துன்ப நுகர்ச்சியும் அவ்வூழ் வயத்ததாகலின் அதைத் தப்புதலு மியலா தென்பதாம். எனவே முன்பே செய்த வினை பின்பு விளையும் முறை அறிந்தவர், இரு வினைப் பயனும் தப்பாது அனுபவிக்கற்பாலனவே எனக் கண்டு நிழல்போல் தொடர்ந்து வருவன யாவும் இயல்பென்று ஏற்றுக்கொள்ள வேண்டு மென்பது அறிவுறுக்கப்பட்டது ஈண்டுக் கண்டு கொள்க.

'அடுத்து முயன்றாலும் ஆகு நாளன்றித் தொடுத்த கருமங்களாகா', 'வருந்தி யழைத்தாலும் வாராத வாரா, பொருந்து

வன போமி னென்றாற் போகா' என்பன போன்ற அண்மைக் காலத் தெழுந்த மூதுரைகளின் போக்கின்படி விதியின் பயனே பயனைக் கொளினும் 'தெய்வத்தானாகாதெனினு முயற்சி தன், மெய் வருந்தக் கூலி தரும்' என்ற குறட்பாவால் ஊழில்லாவிடினும் விடாமுயற்சி யின் மூலம் வியத்தகு பயன் விளையும் என்பது போதரும். விதி வலிய தென்று அஞ்சி அயராமே தளராது முயல்பவர் ஊழையும் வென்று உயர் பயன் காண்பரர்தலான், உலையா முயற்சி ஒழுங்கான போக்கில் மனத்திண்மையுடன் செய்யப்படின் அஃது காலத்துடன் வளர்ந்து பயனளிப்பதில் சிறிதும் தவறாதென்பது வெள்ளிடைமலை. மற்றும் 'பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந் தாள்வினையின்மை பழி' என்ற முதற் பாவலர் தம் பிணக்கிலா மொழியின்படி, மக்க ளுயிர்க்கு விதியில்லாமை பழியாகாது, முயற்சியின்மை யொன்றே பழியாக நிற்கு மென்பது பெறப்படும். மற்றும் மக்கள் தம் முயற்சி யானே நன்னிலை யடைதற்குரிய ரென,

'நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்—நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும், தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்.'

என்ற நாலடிப்பாவும் நவிலும். இதனான் இன்ப துன்ப அனு பவங்கள் பழவினையின் பயனாக வுண்டாகின்றனவே யன்றி இறைவன் தாமாகவே மக்களுயிர்க்கு அவ்வனுபவங்களை அளிக்கின்றானென்ப தில்லை யென்பதும், முயற்சியொடு வினை செய்வானைத் தெய்வம் பின் னின்று ஊக்கி யுதவு மென்பதும், செய்ய வேண்டிய வினையைச் செய்யாது இறைவனை எதிர் பார்ப்பான் மக்கட் பண்பிலாதா னென்பதும் ஊகித் தறியப்படும்.

குறளின் கண் திருவள்ளுவர் தெய்வமாகிய ஊழை யுணர்த்த ஓரதிகாரமும் முயற்சியின் வலியுணர்த்த ஊக்கமுடைமை, மடியின்மை, ஆள்வினையுடைமை, இடுக்கணழியாமை என நான்கு அதிகாரங் களையும் வைப்பு முறையானே வரம்புடன் வகுத்தமைத்து, முயற்சி யினை உடன் பாட்டு முகத்தானும் எதிர்மறை முகத்தானும் வற் புறுத்திக் கூறும் நேர்மையானும் மற்றும்,

(க) ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(உ) குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

என்ற புரை தீர்ந்த மொழிகளானே பொய்யா மொழியார் புலப் படுத்துகின்ற பான்மையானும், ஊழினும் உலையா முயற்சியின் வலி மாணப் பெரிதென்பது விளக்கப்பட்டது காண்க.

ஊழைப் பற்றிய தமிழர் தம் கொள்கைகள், மக்கள் இம்மை மறுமை வாழ்க்கைகளிற் சிறந்து வருதற் கேற்ற இயல் நல முடையன வாயிருக்க, அவைகளின் திட்ப நுட்பத்தை அறிய வொண்ணாதார், ஊழ்வினையின் கண்ணுளே மனம்படிந்து 'ஊழிற் பெருவலியாவுள'

என்ற கருத்தினை மட்டும் மேற்கொண்டு, ஊழ்வினையே யாவற்றிற்கும் முதலாகு மென்றும், எல்லா வுயிர்களும் பண்டை வினைவழி வந்த ஊழின் வழிப்பட்டொழுகு மென்ற நோக்கமுடையராய், ஊழையே முழுதும் நம்பி உள்ளம் உடையப் போக்கி ஊக்கமதைக் கைவிடுவர்.

ஊகமுடன் யோகு செய்து ஊக்கமுடன் ஆக்கமுறுது, வினைப் பயனை ஒரு புறம் தள்ளி வெல்வதற்கு அழுங்கி மயங்கி அதனுன் செய் வினையையும் செய்ய அஞ்சி வினையில் மடங்குப்வர், வள்ளுவர் விளக்கிய ஊழி னுண்மைத் தன்மை எளிதுணர் பொருளாய் வெளிப் படுவதை தினையளவேனும் கண்டிற்றிலர். ஊழ் என்பதோர் சடப் பொருள்: பெரு வலியினை யுடைத்து: அஃது ஒரு இயற்கை நிகழ்ச்சியாகும். சடப் பொருளாகிய ஊழும், சடமாகிய மாயையின் வழி நின்று நிமித்த காரணனுகிய இறைவனது ஆணை வழி உயிர் களுக்கு இன்ப துன்பத்தை ஊட்டுவிக்கும். எனவே தமக் குறுவன தாம் முன்பியற்றிய இரு வினைப் பயனே யன்றி, ஊழ் பிறிதன் றென்பது பெற்றும். இன்பத்தினைமட்டும் விழைந்து தீவினைப் பயனுல் விளையும் துன்பத்தினை உள்ள ;ரியைந்து அனுபவிக்காது அதனை வெறுத்தல் சீரிய அறிவன்று. இவ் வுண்மையைத் தேர்ந்தே, புலவர் பிரான் ஒட்டக்கூத்தரும்,

‘இன்பத்துளிறு மாந்துதோ ணேக்கி யீன்றமத
துன்பத்து ளழுந்துவார் தொல்லுலகி லறியாதார்
இன்பத் துன்பங்களே யெய்தியபோதிவை யெல்லா
முன்பற்று விடாத வினைப்பயனென்பார் முழுதுணர்ந்தோர்’

என அருள்வாராயினர். இரு சடமும் ஒருங்கியைந்து நின்று எவ் வண்ணம் ஓரியற்கை நிகழ்ச்சியினைச் செய்யுமெனின், கரும் பொன் முன் காந்தக்கல் காட்டப்புகின் எவ்வாறு இரு சடமாகிய கரும் பொன்னும் காந்தக்கல்லும் காட்டுவோனது ஆற்றலால் ஒன்று படுமோ, அஃதே போன்று ஊழும் மாயையுமாகிய இரு சடமும், விதியொடு மருவாத இறைவனது ஆணையால் ஒன்று பட்டுக் காரியத்தைச் செய்யும். எனவே, இறைவனது ஆணையால், ஊழ், செய்வினை செய்தானை நிழல் போல் நீங்காது தொடர்ந்து உரு வெடுத்து இன்ப துன்பத்தை யூட்டு மியல்பினதாய நியதியே யாகு மென்பது பெற்றும்.

ஊழ்வினை உருக்கொண்டு வந்து தன் பயனை யூட்டாது கழியா தாதலான், அதனின் தடைபடா வலியினை யுணர்த்த வந்த வள்ளுவர் ‘ஊழிற் பெருவலி யாவுள’ எனக் கூறினரே யொழிய அதனை எதிர் நின்று வெல்லும் ஆற்றலுளது யாது மின்றெனக் குறித்தா ரில்லை. இஃது வள்ளுவர் தம் கருத்தென்பது அக் குறட்பாவின் பிற்பகுதியை நுனித்து நோக்குவார்க்குத் தெற்றெனப் புலனுகும். ‘மற்றொன்று சூழினுந் தான் முந்துறும்’ என்று கூறப்பட்டமை யானே, அவ்வூழினை விலக்குதற் பொருட்டு, பிறிதொன்றுள தென்பதும் அறியப் பெற்றும். ஆனல் அப்பிறிதொன்றை ஆயினும்’

அவ்வூழ், சுழலும் அறிவின் சூழ்ச்சி வாயிலாகவேனும் அல்லது பிறிதொரு வாயிலாகவேனும் வந்து அச்சூழ்ச்சியின் முற்பட்டு நிற்கு மென்பது அக் குறள் வெண்பாவின் நுண்பொருள். எனினும், அஃது பல்லூழ் பெயர்ந்து சூழ்ச்சியின் முற்பட்டு வந்துறும் என்ற வகையினுனே, அவ்வூழினை வென்றழிக்கும் திறன் சூழ்ச்சி யொன்றின் பாலிலதாகு மென்பது நுண்ணியதாய் எடுத்துக் காட்டப் பெற் றுளது. சூழ்ச்சியோடமையாது, கொண்ட வினையைக் குன்றவிடக் கூடாதென்ற சோராத ஆள்வினையுடைமையின், அயரா முயற்சியும் தளரா உழைப்பும் ஊழினை உப்பக்கம் காண வல்லவை யென்பது 'ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித், தாழா துஞற்று பவர்' என்னும் வள்ளுவர் வாய் மொழியான் பகுத்துணர்ந்து கொள்ளற் பாலது. எனவே விழுமிய விறலுடையாரது ஆன்ற அறிவொடு கலந்த உலையா முயற்சிக்கு முன் ஊழ் நில்லா தென்பது ஊகித் தறியப்படும்.

மாந்தர் தம் முள்ளத்தின் அளவினது ஊக்கமாதலின், ஊக்கமுடையார் உள்ளுவதெல்லாம் உயர்பொருள்களின் பொருட்டே யென்க. கூர்ந்து சிந்திக்குங்கால் ஆண்மையொடு நலம் பயக்கும் நல் வினையினை முயலுங் காலத்து, முயல்வாரது வினைப்பயன் அதற்கோரிடையூறுகத் தோன்றி இடுக்கணும் இடும்பையும் விளை விக்கும். 'நன்றி விளைவுந் தீதொடு வரு' மெனப்படுதலான், ஆக்கந் தரும் ஊக்கத்தினை யுடையார் தீது கண்டு மன மழுங்காது, மேலும் சிறந்ததில் சிந்தனை யூன்றி இறைவனைச் சிந்தித்து முயன்ருல், அன்னூர்க்கு முயற்சியே யாவு மென்றும், முடியாத தொன்றுமில்லை யென்றும், வெற்றி யென்பது ஒரு பொருளல்ல வென்பதும் புலப் படும். இவ்வுண்மை தமிழகத்தே இடங்கொண்டு புதியதொரு கிளர்ச்சியினை யெழுப்பி, தமிழ் மக்களுக்கு மருவின வினை விட்டோட பெருவாழ்வு அளித்தமையான்,

(க) 'முயற்சி திருவினை யாக்கும்'
(உ) 'இடுக்கண் வருங்கா னகுக'
(ங) துன்பமுற வரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.
(ச) 'மடியுளான் மாமுகடி யென்ப மடியிலான்
றுளுளா டாமரை யினுள்.
(ரு) தெய்வத்தா னுகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.
(சு) ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

என்றவை போன்ற பொருண்மொழி யாட்சிகள் தமிழ் நூற்கட் கிடந்து அணி யுறுத்துவன வாயின. உலகிய லறிவினை வளர்க்கும் இத்தகைய பொருண் மொழிகள் இருள்சேர் வினைகள் சார்தற் கிடனுன இந் நிலவுலகில், தொழிற்கண் முட்டறுக்கும் நற்றுணைக் கருவியாதல் உற்று நோக்கற்பாலது. மற்றும் வினையை ஒரு புறம் தள்ளி வெல்ல முயலாது அதற்கு வெற்றி கொடுத்துவிட விசைதல்

நலமில்லை யாதலான், ஊழைப் பின்னடையச் செய்யும் உலையா முயற்சி தமிழர் எல்லையறு தொல்லை நெடும் புகழை எஞ்ஞான்றும் பரப்பிய கருவியா யமைந்துள்ள தென்பதூஉம் பெற்றாம்.

உயிர் வழி, வினை நிகழ்தலான் இடரினும் தளரினும் செய்வினையினைக் கடைபோக ஆற்றுவதும் உலைவிலா ஊக்கமே ஆக்கமாகக் கருதுவதுமாய தனிக் கொள்கையுடைய தமிழ் முதுமக்கள், பண்டைக் காலத்தில் உழவு வாணிகம் முதலிய தொழில்களில் வளம்பட்டுப் பெருகி தமிழகத்தில் நிலவித்திகழ்ந்தாராகலின், தொழிற் றுறைகளில் வயப்பட்ட வேற்றுதேய மக்களாகிய யவனர் முதலானோர் தமிழ்க்குடி மக்களோடு துவன்றிக் கலந்து கொண்ட உறவு நாடச்செல காழ்ப் பேறி, பழமையானதாகவே, பிறநாட்டு மக்களது கொள்கைகளும் தமிழகத்தே வேரூன்றி, பரவி நிலைபெறலாயின. பழவினை செறுத்து வந்துறுத்தும்போது செய்வதொன்று மில்லை யென்பதூஉம், வினைகள் யாவும் முன் முறைமைப்படி வரையறுத்து விதிக்கப்பட்ட வண்ணம் அமைவதே இயல்பென்பதூஉம், செய்வினை யாவும் துன்பமுடிவுடைய தென்ற முடிபுடைய யவனர் கொள்கைகள் தமிழ் மக்கள் கருத்தில் கால் கொண்டு பதியலாயின. இதனான் உயிர் வழி வினை நிகழ்தலாகும் தமிழர் தம் கொள்கையும், 'ஊக்க முடைமையே உடைமை' என்ற கருத்தாற் பிணைந்த வினை யுணர்வுகளும் வலியுருது போயது இறும்பூ தாகும்.

'ஊழ் வினையுருத்துவந் தூட்டு' மென்பதை விளக்க வெழுந்த சிலப்பதிகாரம், யவனர் முதலான வேற்றுப் புலத்தாரோடு பழந்தமிழ் மக்கள் உறவு பூண்டு பல்லாண்டுகள் கழிந்த பின்றை, அரசு துறந்த இளங்கோவடிகளால் இயற்றப்பட்டுள்ளது. இஃது ஊழ், வயத்ததாக நிகழும் நிகழ்ச்சியையும் அதன் இயற்கைப் பெருவலியையும் உரைக்கும் பெற்றிய தெனினும், மடிதற்று நின்று வினையின் கண் முனைந்து உய் வினை நாடி முயலுதலை இகழும் பான்மையுடைய தன் றென்பஃது அந் நூலை யாய்ந்துணரப் புலனும் மற்றும் அதன் கண் செய்வினை வழித் தாய் உயிர் செலு மென்பதை பல்லாற்றானும் விதந்து கூறப்பட்டமையும் நன்குணரற் பாலனவே.

இக் கூறிய வாற்றால், அறப் பழங்காலத்தே வினையியல்பை நன் குணர்ந்த தமிழ் மக்கள் பிறவிக்குக் காரணமாய முயற்சிகள் நீக்கி உள்ளத்தில் ஊக்கமும் வீறும் வீட்டிற்குக் காரணமாய முயற்சியும் கொண்டு, வினையைக் கண்டு அழுங்கி மன மடிந்து கலங்காது, அதனைக் கெடுத்தற்குரிய நெறியினை நன் கோர்ந்து, முற்றுணர்வினனும் இறைவனதடி சார்ந்து, செய்வினையினை அச்சமின்றி ஆள் வினையுடைமையா லியற்றி, ஊழையும் ஓட்டி, வினை வழி உயிர் இயங்குவதில்லை யென்ற உண்மையினை நிலைநாட்டி, உள்ளத்தில் ஆண்மையும் திண்மையும் ஒருவருக்குற்ற அறிவாகு மெனத் தம் வாழ்க்கையில் புலப்படுத்திப் புகழ்நட்டி நிலமிசை நீடு வாழ்ந்தன ரென்பதூஉம், ஊழினைப்பற்றித் தமிழ்ப் பெரு நாவலர் விளக்கிய கருத்துகள் யாவும் தமிழ் மரபிற் கின்றியமையாத அறத்திற்கு உறைவிட மாதலும், தளரா ஊக்கத் திற்கும் அயரா உழைப்பிற்கும் அகப்படாத அரும்பொருள் யாதுமின்றென்பதூஉந் தெளிந்தாம்.

---

# எங்கள், தமிழ்

நல்லை. அ. இளங்கோவன், உப்பத்தூர்.

**அறுசீர் விருத்தம்.**

தமிழ்மொழி யெங்கள் சொந்தத் தாய்மொழி யாகு மின்பத்
தமிழ்மொழி தானே யாதித் தனிமொழி தரணி தன்னில் !
தமிழ்மொழி யொன்றி னின்றே தழைத்தன மொழிக ளெல்லாம் !
தமிழ்மொழி யவைகட் கெல்லாந் தாய்மொழி யான தன்றே ! (1)

இயற்கையி லெழுந்து மாற்ற மேதுமுற் றிழித லின்றிச்
செயற்கையி னழுக்கிங் கொன்றுஞ் சேர்ந்திடா தொழியச் செய்திட்
டயற்சிறு மொழியின் கூட்டு மமைந்திட வந்தா லுந்தன்
னுயர்ச்சியை யொழித்தி டாத வொருமொழி தமிழே யாகும் ! (2)

நாவினுக் குருசி யூட்டி நயப்பெழச் செய்து தீஞ்சொற்
பாவினுக் குரிய தெங்கள் பைந்தமி ழொன்றே ; நின்ற
மூவகை யாகி யெங்கள் மொழியெமக் கின்பம் மூட்டும் !
யாவரே பெற்றுள் ளார்கள் யாமனு பவிக்கு மின்பம் ? (3)

தெருவெலாம் நாட கத்தின் தீந்தமி ழிசைப்பா டல்கள்
பெருகிய வொலியே கேட்கும் ! பேசுவ தென்னே யெங்கள்
இருநிதி யாகி நிற்கும் இயற்றமி ழினிமை பற்றி !
ஒருநிக ரற்ற பேறிங் குலகினி லெமக்குத் தானே ! (4)

எந்தமி ழேற்றி ருக்கும் இலக்கணத் தேற்ற மன்றோ
செந்தமி ழென்ற பேரைச் சேர்த்தது ! செழிப்பி லோங்கும்
எந்தமி ழெந்த நாளும் இறந்தொழி யாத தாலுற்
செந்தமி ழென்ற பேரைச் சேர்த்தது சரிதா னன்றோ ? (5)

விஞ்சிய மொழியாய் வந்து வீறுறு நலமே கொண்டு
எஞ்சலின் றிலங்கு மெங்கள் இன்றமி ழிலக்க ணத்தின்
மிஞ்சிய நுட்பத் தன்மை மேன்மையை யறிவீ ராயின்
செஞ்சொலே தமிழென் றெப்பிச் செப்புவீர் ! செப்புவீரே ! (6)

வீட்டிலே பாட்டுப் பாட்டே வெளியிலே வேலை செய்யுங்
காட்டிலே பாட்டுப் பாட்டே கைத்தொழி னிலையி லாண்பெண்
கூட்டிலே பாட்டுப் பாட்டே குறைவிலாச் செல்வ மெங்கள்
நாட்டிலே பாட்டுப் பாட்டே நாவெலாம் பாடு மிங்கே ! (7)

பிறப்பிலும் பாட்டுப் பாட்டே பிஞ்சிள மைக்கா லத்துச்
சிறப்பிலும் வாலி பத்தின் சீரிலும் மணமார் வாழ்க்கைத்
திறப்பிலும் பாட்டுப் பாட்டே செழிப்பிலுஞ் செல்வ மற்ற
வறப்பிலும் பாட்டுத் தானெம் வண்டமிழ் நாடு தன்னில் ! (8)

பூவிலே மேன்மை பெற்றுப் பொலிகிற தமிழ ரெங்கள்
சாவிலே கூடப் பாட்டுச் சங்கடந் தீர்க்கும் பாட்டு !
நாவிலே பாட்டே யெந்த நாளிலுங் கொள்வோ மெங்கள்
பாவிலே யின்பம் போலெப் பாடையின் பாவி லுண்டு ? (9)

சர்க்கரை பசுவின் றீம்பால் தண்ணுங்கு தம்மைப் போலும்
கற்கண்டு போலுந் தேமாங் கனியினைப் போலு மின்றி
நிற்கின்ற சுவையைக் கொண்டு நீண்டநாட் பேச்சுக் கொண்ட
சொற்கொண்ட தமிழைப் போன்ற சொல்லுண்டோ? சொல்லும்! சொல்லும்!
கரும்பிலோ பனையின் பாகுக் கட்டியிற் றுனோ காவில்
அரும்புகள் திரண்டு விம்மி யழகுற மலர்ந்த பின்னர்
வரும்பதத் தேனிற் றுனோ மன்னிய தமிழ ணங்கு
தரும்சதத் தினிமை காண்பீர் தாரணி யோரே கூறும்! (11)
வள்ளுவன் என்றோர் ஞானி வகுத்தனன் குறளூ லொன்று
தெள்ளிய நடையி னுலும் செம்பொரு ளுட்பத் தாலும்
உள்ளுவா ருள்ளுந் தோறும் ஒருபடி யுயர்ந்து நெஞ்சை
அள்ளுமந் தத்த மிழ்நூல் அதற்கது தானுப் பாகும்! (12)
கம்பனைப் போலு மெங்கே கவிஞனைக் கண்ட துண்டு!
கம்பனின் காவி யம்போற் காவிய மேது முண்டோ?
தெம்புரை யன்று கண்டீர்! தெண்டிரை வாளாகத் தீரே
எம்பெரும் பேறேயன்றோ இங்கவ னுதித்த தம்மா! (13)
சேரரி லொருவன் றம்பி சிலப்பதி கார மென்ற
நேரிய காவி யத்தை நிலேத்திட நிகழ்த்தி வைத்தான்!
ஆரமு தத்தித் திப்பை யமுக்கிய வதனை யுண்ணும்
சீரிய பேறு கொண்டோம் செந்தமிழ் மக்கள் நாங்கள்! (14)
எம்மொழி யேற்ற மெல்லாம் இயம்பிட லெளிதோ? இங்கே
செம்மொழி யதுவே யன்றோ! செகமழிந் தாலு மெங்கள்
தம்மொழி யழியா தென்றுந் தங்கிடுந் தளிர்த்து நிற்கும்!
இம்மொழி புகழ்ச்சி யில்லை; இயல்பினி லெழுந்த உண்மை! (15)
தமிழெமக் குடல மாகும் தன்னிக ரற்றி லங்கும்
தமிழெமக் குடைமை யாகும் சாவிலா தென்றும் வாழத்
தமிழெமக் குயிரு மாகும் தளர்ச்சியில் லாம லென்றும்
தமிழெமக் கெல்லா மாக்கித் தருக்குற வாழ் விக்கும்மே! (16)

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகத்தில் 16—8—45 ஆம் நாள், நம் சங்க அமைச்சரும், இனும்தாரரும், சிறந்த தமிழ்றிஞருமாகிய **திரு. நீ. கந்தசாமி பிள்ளை M. R. A. S. (London) அவர்களின்** தலைமையில் பதிப்பகத்தை நடத்திவந்தவரும், நம் சங்கத்தலைவரும், செந்தமிழ்ப் புரவலரும், தமிழவேளுமாகிய இராவ்சாகிபு **திரு. த. வே. உமாமகேசு வரம் பிள்ளை அவர்களின்** படத்திறப்புவிழா சிறப்புற நிகழ்ந்தது. அதுபோது பதிப்பக அமைச்சர் **திரு. த. பொ. கை. அழகிரிசாமி பிள்ளை அவர்கள் தமிழவேள் அவர்களின்** அரிய பண்புகளை எடுத்துக்கூறி, படத்தைத் திறந்துவைக்கும்படி வேண்டிக்கொள்ள, **திரு. நீ. கந்தசாமி பிள்ளை அவர்களும், தமிழவேள் அவர்களின்** சிறந்த பண்புகளை உளங் கனிந்துகூறி, படத்தைத் திறந்து வைத்தார்கள், பதிப்பகத் தலைவர் **கரந்தைக் கவியரசு. R. வேங்கடாசலம் பிள்ளை அவர்களின்** நன்றி கூறலுடன் விழா இனிது நிறைவேறியது.

புறப்பொருள்

## கரந்தையும், நொச்சியும்

மா. சிவகுருநாதன் சுந்தரப்பெருமாள்கோவில்

(திருச்சி அனைத்திந்திய வானொலியில் பேசியது.)

தமிழ்மொழியானது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்து இலக்கணங்களை உடையது. இவற்றுள் பொருள், அகம், புறம் என இருவகைப்படும்.

அகமாவது ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் கூடித்துய்க்கும் இன்பத்தைப் பற்றியதாகும். இதனை இவ்வாறிருந்ததென வெளியில்கூற இயலாதாகையால் அகமெனப்பட்டது. இது மக்கள் அடைதற்குரிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினுள் இன்பத்தைப்பற்றிக் கூறும் தன்மை உடையது.

புறமாவது இவ்வொத்த அன்புடையார் தம்மாலன்றி யாவராலும் சுட்டி உணர்ந்து இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக்கூறும் தன்மையதாய்ப் புறத்தே நிகழ்வதாகும். இது அறம், பொருள் என்னும் இரண்டைப்பற்றி எடுத்துக்கூறும்.

இப்புறப் பொருளானது பண்டைக்காலத்தில் நம் தமிழ்நாட்டில் வாழ்ந்துவந்த முடியுடை மூவேந்தர், சிற்றரசர், எழுவள்ளல்கள், வீரர் முதலியோரது வரலாற்றையும்; கடைச்சங்கப் புலவர்களது தன்மையையும், மக்களது வாழ்க்கை முதலியவற்றையும் அடிப்படையாகக் கொண்டதாகும்.

நம் முற்காலப் புலவர்கள் இப்புறப்பொருளை வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை எனப் பன்னிரெண்டு திணைகளாய்ப் பிரித்துள்ளனர்.

இத்திணைகளில் பெரும்பாலும் எடுத்துக் கொள்ளப்படுவன போர் நிகழ்ச்சிகளே யாதலினாலும் இப்போர் நிகழ்ச்சிக்கு உரியார் பொருட்பேறு படைத்த அரசர்கள் தலைவர்களேயாதலினாலும், அவர்களே இனி, கூறப்போகும் பொருள்களுக்கு உரியவராகக் கொள்ளப் படுகின்றனர்.

மண்ணாசையால், அல்லது புய வலியை நிறுவுவதற்காக, வேற்று நாட்டைக் கொள்ளக் கருதிய அரசன் அந்நாட்டின் மேல் போருக்கெழுவான். அவ்வாறு போருக்கெழுவதன் முன், தம்மைக் காத்துக் கொள்ள இயலாத அறவோர், பெண்டிர், பசுக்கள் முதலியவர்கள் இப் போரினால் துன்புறா வண்ணம் அந்நாட்டினின்றும் எச்சரித்து அவர்களை அப்புறப் படுத்துவான். அவ்வாறு அப்புறப் படுத்தும் போது அவர்கள் புகலிடம் காணாராயின் அவர்களைத் தன் நாட்டிற்கு வருவித்துக் கொள்வான். இவ்வாறு வருவித்தலை உணர்ந்து வருதற்குரிய பகுத்தறிவற்ற பசுக் கூட்டங்களைத் தனது வீரர்களை விட்டுக் கவர்ந்து வரச்செய்வான்.

அவ்வமயம் அவ்வீரர்கள் பறை முழக்கி வெட்சிப்பூவை அணிந்து பகைவர் வாழ் நாட்டிலுள்ள பசுக்களைக் கவர்ந்து வருவர். இவ்வாறு கவர்ந்து வரும் செயல் வெட்சி ஒழுக்கம் அல்லது வெட்சித் திணை எனப்படும்.

இனி இப்பசுக் கூட்டங்கள் மாற்றரசனின் படையினரால் கவரப்பட்ட செய்தியை உணர்ந்த அப்பசுக் கூட்டங்களுக்குரிய மன்னன் வெகுண்டு தன் படையினரை ஏவி மீட்டு வர அனுப்புவான். அப்போது அப்படையினர் கரந்தைப் பூவையேனும் மாலையையேனும் சூடி நிரையை மீட்டு வரச் செல்லல் கரந்தை ஒழுக்கம் அல்லது கரந்தைத்திணை எனப்படும். இக் கரந்தைத்திணை முதலில் கூறிய வெட்சித்திணைக்கு மாறாகும். இதனை 'வெட்சியும் கரந்தையும் தம் முண்மாறே' எனப் பன்னிரு படலங் கூறும்.

மகாபாரதக் கதையில் பாண்டவர்கள் ஐவரும் மாற்றுருவோடு விராடனது அரண்மனையில் வசித்து வந்தனர். அவ்வமயம் துரியோதனாதியர் படைகொண்டு சென்று விராடனது பசுக்களைக் கவர்ந்தனர். இதனை உணர்ந்த விராடனின் குமாரனாகிய உத்தரன், பேடியுருவாய் அங்கிருந்த அருச்சுனனைத் தனது தேர்ப்பாகனுய்க் கொண்டு இழந்த ஆநிரைகளை மீட்கச் சென்றனன். சென்றவன் எதிரிகளின் படை வலி கண்டு, தன் புய வலி குன்றித் தளர்வுற்றனன். அப்போது அருச்சுனன் அதற்கு முன் மறைத்து வைத்திருந்த தனது ஆயுதங்களை எடுத்து வந்து துரியோதனாதியருடன் போர் புரிந்து ஆநிரைகளை மீட்டு வந்தனன்.

இச்செயல் கரந்தைப் படையினர் பசுக் கூட்டங்களை மீட்டு வந்ததற்கோர் எடுத்துக் காட்டாகும்.

சில சமயங்களில் இவர்கள் அருச்சுனனைப்போல் மீட்டு வர வலி இல்லாது தோல்வியுறுவதும் உண்டு. இனி, இக்கரந்தைத் திணையில் நிகழ்வுறும் நிகழ்ச்சிகளை இதனை விளக்கிக் கூறும் துறைகளால் அறிவாம். இதனைப் புறப்பொருள் வெண்பாமாலையில்,

'கதமலி கரந்தை ; கரந்தை யரவம்
அதரிடைச் செலவே ; அரும்போர் மலைதல்
புண்ணொடு வருதல் ; போர்க்களத் தொழிதல்
ஆளெறி பிள்ளை ; பிள்ளைத் தெளிவே
பிள்ளை யாட்டொடு ; கையறு நிலையே
நெடுமொழி கூறல் ; பிள்ளைப் பெயர்ச்சி
வேத்தியன் மலிபே ; மிகுகுடி நிலையென
அருங்கலை யுணர்ந்தோர் அவைபதி நான்கும்
கரந்தையும் கரந்தைத் துறையு மென்ப.'

என ஆசிரியர் ஐயனாரிதனார் பலதுறைகளாய்ப் பகுத்துக்கூறுகின்றார். முதலில் '**கரந்தை யரவம்**' என்பது பகைவர்கள் பசுக் கூட்டங்களைக் கவர்ந்து சென்ற செய்தியை வீரர்கள் அறிந்தவுடன் வீரத்துடன் எழுந்து வீரக்கழலை அணிந்து வில், வாள், ஈட்டி முதலிய ஆயுதங்களைத் தாங்கிக் கரந்தைப் பூவைச்சூடி, பெரு முழக்கத்தோடு புறப்

படும் செய்கையாகும். இனி இவர்கள் அப்பசுக் கூட்டங்களின் அடிச்சுவட்டைக் கண்டு அதன் வழியே பின் பற்றிச் செல்வர். இது '**அதரிடைச் செல**' வாகும். இவ்வாறு செல்லும்போது தங்களது பசுக் கூட்டங்களை அணுகிய பின் அவ்வெட்சிப் படையினரோடு பசுக் கூட்டங்களை மீட்கப் போர் புரிவர். இது '**போர் மலைதல்**' என ஆகும். இப்போரில் இவர்கள் வில், வாள், ஈட்டி இவ்வாயுதங்களால் புண்படுதலை '**புண்ணொடு வருதல்**' எனவும், இடையில் இப்போரில் அஞ்சி புறமுதுகிடாது அமராடி வீரர்கள் உயிர் இழப்பதைப் '**போர்க்களத் தொழிதல்**' எனவும் கூறுவர். இப்படிப் பலரும் இறக்கத் தான் ஒருவன் மட்டும் விடாது போரிடும் வீரனது ஆற்றல் '**ஆளெறி பிள்ளை**' எனப்படும். இதில் புண்பட்ட வீரனொருவன் இடையில் பறை கொட்டிக் கூத்தாடுவான். இதனை, '**பிள்ளைத்தெளிவு**' எனவும், பின் இவன் பகைவரின் குடரைப் பிடுங்கி மாலையாய்ச் சூடி ஆடலை '**பிள்ளையாட்டு**' எனவும் கூறுவர். கடைசியில் இப்போரில் இறந்தவர்களைத் தவிர்த்த மற்றையோர் உயிர் இழந்தவர்களின் தன்மையை எடுத்துக் கூறல் '**கையறு நிலை**' எனவும், எல்லாரிலும் தானே மிக்க திறலுடன் போர் புரிந்ததாய்த் தன்னைப்பற்றி மிகைப் படுத்திக்கூறும் வீரனதுசெயல் '**நெடுமொழிகூறல்**'எனவுங்கூறப்படும்.

முதலில் இவர்கள் போருக் கெழுந்து செல்லும்போது காரி என்னும் கருக்குருவி வலமாய்ச் சென்ற துர்நிமித்தங் கண்டும் தளர்வுறாது சென்றமையைக் கூறல் '**பிள்ளைப் பெயர்ச்சி**' எனவும், இப்போரில் அரசனுக்கெனத் தங்கள் உயிரையும் விடல் திண்ணம் எனவும், இவ்வுலகம் தோன்றிய அன்றே பிறந்து மிக்க பேரும் புகழுடன் விளங்கிவருவது தங்கள் குடியே எனவுந் தங்களை வீரர்கள் சிறப்பித்துக் கூறிச் செல்லல் முறையே '**வேத்தியன் மலிபு**' '**குடிநிலை**' எனக் கூறப்படும்.

இதுவரை, கூறிய இக்கரந்தைத்திணையின் ஒழுக்கத்திற்குத்தொல்காப்பியரின் கருத்தை நோக்குவாம். அவர் தம் அகப்பொருளுக்குப் பிரித்துக்கொண்ட குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை முதலிய ஏழு திணைகட்கும் இனமாகவே இப்புறப் பொருளின் ஒழுக்கங்களை முறையே வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண் எனப் பிரித்துள்ளார்.

இக்கரந்தை ஒழுக்கத்தை வெட்சியின் திணைக்குள் அடக்கி அதை வெட்சியின் வழுவெனக் கொண்டார். இன்னும் இக்கரந்தைத் திணையின் துறைகளை இதுவரை கூறிய போர்மலைதல், வேத்தியன் மலிபு, நெடுமொழி கூறல், ஆளெறிபிள்ளை, பிள்ளைத்தெளிவு, பிள்ளைப்பெயர்ச்சி என்னும் கருத்துக்களுக்கு ஒப்ப ஆறேதுறைகளைக் கூறுகின்றார்.

இனி நொச்சி ஒழுக்கமாவது, இரு அரசர்கள் தங்கள் படை கொண்டு போரிடுங்கால் ஒருவன் போராட வலி இழந்து ஓடி, தன் கோட்டைக்குள் புகுந்துகொள்வதுண்டு. பின்னர், தங்கள் கோட்டை வெளியில் உள்ள படையினரால் சிதைவுறா வண்ணம் மருத நிலப் பூவாகிய நொச்சியைஅணிந்து அரணை, பாதுகாத்தல் நொச்சிஒழுக்கம்

அல்லது நொச்சித்திணை எனல் ஆகும். அவ்வமயம் கோட்டைக்குள் புக விழையும் மன்னன் தன் படையினருடன் உழிஞைப்பூவைச்சூடி, கோட்டையை முற்றுகை இடுவான். இச்செயல் 'உழிஞைத் திணை' எனக் கூறப்படும். இவ்வுழிஞையும், நொச்சியும் ஒன்றுக் கொன்று மாறுகும். இதனை 'உழிஞையும் நொச்சியும் தம்முண் மாறே' எனப் பன்னிரு படலங்கூறும்.

கடை எழு வள்ளல்களில் ஒருவனுகிய பாரியினது பரம்பு நாட்டின்மேல் சேர, சோழ பாண்டியர் மூவரும் படைகொண்டு சென்றனர். இதனை உணர்ந்த பாரி வள்ளல் தம் படையினருடன் ஆயுதங்களைத் தாங்கி நொச்சியைச்சூடி, தன் கோட்டைக்குள் எதிரிகள் புகா வண்ணம் போர் புரிந்தனன். கடைசிவரை மூவேந்தரும் படைவலியால் கோட்டைக்குள் புகுந்து பாரியை வெல்ல முடியவில்லை. அவ்வமயம் நொச்சிப் படையினனுகிய பாரியே வெற்றியுற்றனன். எனினும் பின்னர் மூவேந்தரும் வஞ்சத்தாலே பாரியைக் கொன்றனர்.

சில சமயங்களில் இந்நொச்சிப் படையினர் வெற்றியுருது கோட்டையை இழந்து தோல்வியுறுவதும் உண்டு. பெரும்பாலும் இந்நொச்சி ஒழுக்கத்தில் நிகழ்வுறும் நிகழ்ச்சிகள் யாவும் தோல்வியே என்பதை இதனை விளக்கும் நூல்களால் அறியலாம்.

இக்கோட்டைக்குள் இருக்கும் நொச்சி வீரர்கள் போர் செய்ய வலியற்று இறந்து படுதலை 'மறனுடைப்பாசி' எனவும், இவர்கள் உள்ளிருந்தபடியே உழிஞையருடன் போராடலைக் கூறல் 'ஊர்ச் செரு' எனவும், தங்களால் முடியும்வரை முழுவலிகொண்டு போராடிப் பின் உயிர் துறத்தல் 'செருவிடை வீழ்தல்' எனவும் கூறப்படும். உழிஞையரால் விடப்படும் குதிரைகள் மதிலின் மேல் பாயும் சிறப்பைக் கூறலைக் 'குதிரைமறம்' என்பர். மதிற் சுவரிடத்தே மாற்ருருடன் போர் மலைதலை 'எயிற்போர்' எனவும், இப்போரில் இவர்கள் மாண்டு கோட்டை அழிதல் 'எயிறனை அழித்தல்' எனவும், இறுதியில் எஞ்சியுள்ள படையினர் சற்றேனும் தளர்வுருது மீண்டும் போராடல் 'அழிபடை தாங்கல்' எனவுங் கூறப்படும். பின்னர் இந்நொச்சிப் படையினர் தோல்வியுற்ற பின் இவர்களது பெண்களை எதிரிப்படையினர் மணக்க விரும்புவர். அவ்வமயம் இவர்கள் இதனை மறுப்பர்; இது 'மகண் மறுத்து மொழிதல்' எனப்படும். இவ்வாறு முறையே புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் இந்நொச்சி ஒழுக்கத்தை இதுவரையிற் கூறிய துறைகளால் விளக்குகின்ருர்.

தொல்காப்பியரும் இவ்வொழுக்கத்திற்குத் தோல்வியைக் கூறி 'அன்றி முற்றிய அகத்தோன் வீழ்ந்த நொச்சியும்' என்று 'குடையும் வாளும்' என்னும் பாவில் ஒரே துறையைக் கூறி இதனை உழிஞைத் திணைக்குள் அடக்குகின்ருர்.

இனி இந்நொச்சி ஒழுக்கம் உள்ளிட்ட உழிஞைத் திணைக்கும், அகத்திணை மருதத்திற்கும் உள்ள நுண்ணிய ஒற்றுமையை ஆராய்வாம்.

இவ்விரண்டிற்கும் உரிய இடங்கள் மருத நிலமே. இவ்வுழிஞையும் நொச்சியும் நிகழும் இடமான அரசனது கோட்டை, வயலும் வயலைச் சார்ந்த இடமுமாமென்பதை,

பிணங்கு கதிர்க் கழனி நாப்பண் ஏமுற்று
உணங்கு கலன் ஆழியின் தோன்றும்
ஓர் எயில்.'

என ஆசிரியர் குன்றூர்க்கிழார் புறநானூற்றில் கூறுகின்றார்.

அகத்திணை மருதத்துத் தலைவனும் தலைவியும் சூடும் பூக்கள் அம் மருத நிலப்பூவாகிய தாமரையும், செங்கழுநீரும் ஆகும். இஃதே போல் புறத்திணை உழிஞைப் படையினரும் நொச்சிப் படையினரும், அணிவது அம்மருத நிலப்பூவாகிய உழிஞையும் நொச்சியும் ஆகும்.

இம்மருத நிலத்திற்குப் பொழுது விடியல். இதனை 'வைகுறு விடியன் மருதம்' எனத் தொல்காப்பியர் கூறுகின்றார்.

அகத்திணை மருதத்துத் தலைவன் இரவெல்லாம் பரத்தையர் வீட்டில் இனிதே காலம் போக்கி விடியலில் தன் இல்லத்திற்கு வருகின்றான். இஃதே போல் புறத்திணை உழிஞைப் படையினரும் இரவெல்லாம் பாசறையிற் றங்கி விடியலில் தான் முற்றுகையிடப் போகும் கோட்டையை அணுகுகின்றனர்.

அகத்திணை மருதத்து, தலைவி தன் தலைவன் பரத்தையர் வீட்டில் தங்கி அன்றிரவில் தன்னைத் தனிமையாக்கினதை நினைத்துத் தன் வீட்டின் கதவைத் தாளிட்டுத் தலைவனை உள்ளே விட மறுக்கின்றாள். இதை ஒப்ப, புறத்திணை நொச்சிப் படையினரும் தங்கள் கோட்டை வாயிலை அடைத்துக்கொண்டு உழிஞைப் படையினரை உள்ளே விடாமல் தடுக்கின்றனர்.

அகத்திணைத் தலைவி முதலில் தன் கணவனை உள்ளே விட மறுத்தாள் எனினும் பின் உற்ற நேரங் கண்டு தாள் திறந்து அவனுடன் ஊடற் போர் புரிகின்றாள். புறத்திணை நொச்சிப் படையினரும் உற்ற நேரத்தில் வாயில் திறந்து உழிஞையருடன் போர்புரியத் தொடங்குகின்றார்கள்.

இதுவரை, கூறிய இக்கரந்தை, நொச்சி என்னும் இவ்விரு பொருள்களும், போரிடும் அரசர்கள் அவ்வப்பொழுது அணியும் பூக்களின் பெயராலேயே இத்தலைப்பைப் பெற்று விளங்குகின்றன என்பதனை நன்குணரலாம்.

இவ்விரு பூக்களையும் நந்தமிழ் நாட்டில் காணலாம். இதில் கரந்தையானது சிவ கரந்தை, விஷ்ணு கரந்தை என இருவகைப்படும். சிவ கரந்தையின் பூக்கள் நீண்ட உருண்ட சிறு வடிவாய், பசுமை நிறத்துடன் அச்செடியின் கணுச் சந்துகளில் பூக்கும். இதற்கு ஒருவித மண முண்டு. இதன் இலைகளைக்கொண்டு சைவர்கள் சிவபெருமானைப் பூசிப்பர். விஷ்ணு கரந்தையின் பூக்கள் நீல நிறத்துடன் சிறிதாய் இருக்கும்.

நொச்சியிலும் வெண்நொச்சி, கருநொச்சி என இருவகை உண்டு. வெண்நொச்சியின் பூக்கள் சிறிதாயும் நீல நிறமாயும், கருநொச்சியின் பூக்கள் வெண்மையாயும் இருக்கும். வெண்நொச்சியின் இலைகள் மூன்று பிரிவுகளை உடையன. இவ்விலை சிவபெருமானைப் பூசித்தற்குரிய ஐவகை வில்வங்களில் ஒன்றாய் விளங்குகிறது.

160-ஆம் பக்கத் தொடர்ச்சி.

இங்ஙனம் இயற்கையில் மக்கட்கு முயற்சியும், அறிவும் ஏற்றத் தாழ்வாக இருக்குங் காரணத்தினு லன்றோ சம உரிமை ஊதியம் பெறுவோர்கள் மாட்டுப் புகுத்த முடியவில்லை. இந்தக் காரணத்தை அறியாமல் சிலர் ஏற்றத் தாழ்விற்குக் காரணம் மதந்தான் என்று கூறினர். அஃது உண்மையாகாது. இதையே, ஸ்டாலினும் கூறியுள் ளார். ஒரு கால் காண்டர்பரி பிஷப்பை அவர் சந்தித்துப் பேசுங்கால் அரசியலைப் பற்றி மட்டும் பேசினுராம். ஏன் மதத்தைப் பற்றி ஒன்றும் உசாவ வில்லை என வினவியபோது அவர், "எங்கள் அரசாங்கம் மதத்தை நீக்க விழையவே இல்லை. மக்கள் மனம் எதை விரும்புகின்றதோ அதை உண்டாக்குவதும், அவர்கள் வேண்டா மென்று வெறுப்பதை நீக்குவதுமே, எங்கள் அரசாங்கங் கொண்டுள்ள மதமாகும்" எனக் குறிப்பிட்டுள்ளார். எனவே அவர்கள் மனச் சான்றையே சிறந்த மதமாகக் கொண்டிருக்கின்ருர்கள் என்பது நமக்கு நன்கு புலனுகின்றது. உருசியா நாட்டினது புள்ளி விவரங்களை யெல்லாம் பிற நாட்டினருக்கு அவ்வரசாங்கத்தார் தெரிவிப்பதில்லையாம்.

இவ்வாறு மக்கள் அமைதியும், அன்பும் நிறைந்த வாழ்வினை இழந்ததற்குக் காரணம் என்னையெனின் மக்கள் சமய வாழ்வை மேற் கொள்வதை வெறுத்ததே சிறந்த காரணமாகும் என்பதைச் சுவாமி விவேகாநந்தர் மேனுட்டில் தாம் பேசியபோது எடுத்துக் கூறி யுள்ளார். அவர், "இப்போது நீவிரெல்லீரும் சமய வாழ்வை மேற் கொண்டு அமைதியும், அன்புங் கொண்டு இலங்கும் இந்திய நாட்டைப் பார்த்து ஏளனம் செய்யலாம், அந்நாட்டு மக்கள் உங்கள் கண் களுக்கு ஏழைகளாகவும், பிச்சைக்காரர்களாகவும், இன்பமாக வாழத் தெரியாதவர்களாகவும், அறிவில்லாதவர்களாகவும் காணப்படலாம். ஆனுல் அந்நாட்டின் பெருமையினையும், அம்மக்களின் உயர்வினையும் இன்னும் 50 ஆண்டுகட்குப் பின்னுல் நீவிரெல்லீரும் நன்கு உணர் வீர்கள்! எனவே உங்களுக்கு எதிர்காலம் சிறந்த மறு மொழியை அளிக்கும். அன்றைக்குத் தான் அமைதியும், அன்பும் உள்ள வாழ்வே சிறந்ததென்பது புலனுகப் போகின்றது" எனவுங் கூறி யுள்ளார். அன்பும் அமைதியும் பொதிந்த சிறந்த வாழ்வு நம் இந்தியா நாட்டில் தான் உண்டு. உலகில் வேறெங்குங் காணப்பட்டிலது என்பதும் அவருடைய அனுபவக் கூற்று ஆகும்.

இனி இந்த அன்பும், அமைதியும் உண்டாக்கும் சமய வாழ்வை எல்லாருமே உலகில் ஏற்கத் தக்கவர்களா என்ருல் ஏற்கத் தக்கவர் களே ஆவார்கள். ஆனுல் இன்றைக்குச் சமயவாழ்வினை மேற்கொள் கின்றவர்கள் பெரும்பாலாக முத்திறத்தவர்களாகக் காணப்படுகின் ருர்கள். மனிதன் இன்பத்தை நுகரும் வரையினும், இறைவனைப் பற்றி நினைப்பதற்கு அவனுக்கு வாய்ப்பில்லை. துன்பமும், மூப்பின் தளர்ச்சியும் வருங்காலத்தும், தன்னுடைய ஆற்றலினும், மிக்க ஆற் றல் பொருந்திய செயல்களைக் காணுங்காலத்தினும், வாழ்க்கையிலே எண்ணிறந்த இன்னல்களுக்கு இரையாகித் துன்புறுகின்ற காலத்தும் அவன் அன்பும், அமைதியும் நாடுங் கருத்துடையவனுகின்ருன்.

அதனால் அங்ஙனம் அவன்நாடிய அன்பையும், அமைதியையும் கொடுப்பதாகிய சமய வாழ்வை மேற்கொள்ள முற்படுகின்றான். இம்முத்திறத்தவர்களேயன்றி மற்றவர்களாகிய எல்லாத் துறையிலும் நாட்டின் நன்மைக்காக உழைப்பவர்களும், ஓய்வையும், அமைதியையும், அன்பையும் விழைகின்றவர்களாக இருக்கின்றார்கள். எனவே அவர்களும் சமய வாழ்வை ஏற்கவேண்டியவர்களாகவே இருக்கின்றார்கள்.

இத்தகைய சமய வாழ்வை மேற்கொண்டு ஒழுகவேண்டிய நெறிகள் பல உள்ளன. அந்நெறிகளெல்லாம் மனிதனின் மனத்தை ஒருமையில் நிறுத்துதற்கே உதவி புரிவனவாக இருக்கின்றன. இந்த மனஒருமைப்பாடு மக்கள் தலை சிறந்ததாகக்கொள்ள வேண்டியதென்பதைப்பற்றி (James Adeen) 'ஜேம்ஸ் அடீன்' என்பவர் எழுதியுள்ளார். அவர் மனத்தை ஒருமைப் படுத்துவதற்கு நெறிகளுங் கூறியுள்ளார்.

உலகம் முழுவதிலும் சிலை (விக்ரக) (Idol worship) வணக்கம் இறைவனைக் குறித்துச்செய்யப்பட்டுவருவது நாமெல்லாம் அறிந்ததேயாகும். இந்த முறை மன ஒருமைப்பாட்டை உண்டாக்கவும், வளர்க்கவும் உதவி புரிவதோர் சிறந்த நெறியாகும். மற்றும், நல்லனவே செய்து அல்லனவற்றை நீக்குதல், பாடல் முதலியன யாத்தல், தத்துவ சாத்திரங்களைப் படித்தாராய்தல், முதலியவைகளும் அம்மன ஒருமையை உண்டாக்குவதற்குத் துணையாகக் கொள்ள வேண்டிய சில நெறிகளாகும்.

வழிபாட்டினால் மன அமைதி யேற்படுகின்றது. அவ்வழிபாடு அவரவர் தகுதிக் கேற்ப அமைந்துள்ளது என்று வீரனான நெப்போலியனும், நமது நாட்டின் இன்றைய பெரியாராகிய காந்தியார் அவர்களுங் கூறியுள்ளனர். அமைதி நிலவிய மனத்தையுடையவர்கள் தான் உலகத்தில் உயர்ந்த தொண்டுகளை எவ்வித இடையூறுகட்கும் அஞ்சாமல் செய்ய முடியும். இதனை நமது சமயாச்சாரியர்களின் வாழ்க்கை முறையினைக் கொண்டுந் தெளியலாம். மேனாட்டு வீரனான நெப்போலியன் இத்தகைய அமைதி நிலவிய மனத்தை உடையவனாயிருந்ததினாலே தான், ஒரு போது தான் முடங்கல் ஒன்றினை விரைந்து எழுதிக் கொண்டிருந்தபோது ஒரு வெடிகுண்டு தன் அண்மையிலே விழுந்து, அதனால் மண் துகள்கள் அவன் முடங்கலில் பட, அதனைக் கண்ணுற்று மையொற்றும் வேலை தனக்கில்லாமல் அம்மண் துகள்களே செய்தன வென்று மனம் சிறிதும் அதிர்ச்சியில்லாமல், மகிழ்ச்சியோடு கூறினான். ஸ்டாலின், மைக்கேல் காலின்ஸ் (Stalin Michal Callins) ஆகிய பெரியோர்கள் மன ஒருமைப்பாடு பெரிதும் பெற்றவர்களாவார்கள். அதனால் தான் செயற்கருஞ் செயல்களை யெல்லாம் அப் பெரியார்கள் ஆற்றுகின்றார்கள். இத்தகைய அமைதியான மனத்தை மௌனத்தினாலும் பெறலாம். இந்த நெறியைக் கடைப்பிடித் தொழுகுகின்றவரே ஸ்டாலின் ஆவார். இவர் தன் வாணாளிலேயே மிகக் குறைவாகப் பேசியவராவார். சர்ச்சில் ஒரு திங்களில் 5, 6 தடவை பேசினால், ஸ்டாலின் ஒரு ஆண்டுக்கு ஒரு முறையே பேசுவாராம். இதனால் அவருடைய மனவமைதியும், திண்மையும் புலனாகின்றது.

(தொடரும்.)